# முத்தமிழ் வாசகம்



## முதல் புத்தகம்




FORM I

[PART I]





பத்மா பப்ளிஷிங் அவுஸ்

10, தெற்கு உஸ்மான் ரோடு

தியாகராயநகர் :: சென்னை-17.

# முத்தமிழ் வாசகம்

## முதல் படிவம்

(பொதுப்பகுதி)

[புதிய பாடதிட்டப்படி அமைந்தது]

ஆசிரியர்கள் :

**வித்துவான், கோ. அரங்கசாமி ஐயங்கார்,**
தலைமைத்தமிழாசிரியர்,
செயிண்டு எப்பா பெண் உயர்நிலைப்பள்ளி,
மயிலாப்பூர், சென்னை.

**வித்துவான், S. கிருஷ்ணசாமி, B.A., B.O.L.,**
தலைமைத் தமிழாசிரியர், கெலெட் உயர்நிலைப்பள்ளி,
திருவல்லிக்கேணி, சென்னை.

**பத்மா பப்ளிஷிங் அவுஸ்**

**10, தெற்கு உஸ்மான் ரோடு,**

**தியாகராயநகர் :: சென்னை-17.**



[விலை 0—14—0

# முன்னுரை

உலகிலுள்ள நாடுகள் எல்லாம், கல்வியால் முன்னேற்றம் அடைந்துள்ளன. நம் நாடும், கல்வி அறிவால் மேன்மை அடைதல் வேண்டும். அந்தக் கல்வி அறிவை மாணவர்கள், தக்கபடி அடைய அரசாங்கக் கல்வித் துறையாளர்கள், (26–6–51இல்) வெளியிட்ட புதிய பாட அமைப்பின்படி, முதல் படிவத்துக்குரிய முத்தமிழ் வாசகம் என்னும் இந்நூல் அமைந்துள்ளது.

முதல் படிவத்துக்குப் பொதுப் பகுதி, சிறப்புப் பகுதி என்று இரண்டு நூல்கள், உண்டு. அவற்றுள், இந்த நூல், பொதுப் பகுதிக்கு என்று எழுதப்பட்டது. இந்தப் பொதுப் பகுதி நூலில், உரைநடைப் பாடங்களும், செய்யுட்களும் கல்வித் துறையினர் விதித்துள்ள அளவிற்கு அதிகமாகவே சேர்க்கப்பட்டுள்ளன. ஆயினும், பாடதிட்டத்தில் கண்டபடி பாடங்கள், இந்த நூலுள் அமைந்துள்ளன.

ஒவ்வொரு உரைநடையின் ஈற்றிலும் குறிப்புரைகள், வினாக்கள், இலக்கணங்கள், பயிற்சிகள் தரப்பட்டுள்ளன. இங்குக் கொடுக்கப்பட்டுள்ள இலக்கணங்கள், பொதுப் பகுதி நூலைக் கற்கும் மாணவர்களுக்கு வேண்டிய அளவில் அமைந்துள்ளன.

ஒவ்வொரு செய்யுட் பாடத்தின் முதலில் ஆசிரியர்கள் வரலாறும், வாழ்ந்த காலமும், பிற குறிப்புக்களும், கொடுக்கப்பட்டுள்ளன. இறுதியில் குறிப்புரைகளும், வினாக்களும் சேர்க்கப்பட்டுள்ளன.

இந்நூலின் செய்யுட் பகுதியில் சி. சுப்பிரமணிய பாரதியார் பாடலைச் சேர்த்துக் கொள்ள அநுமதி தந்த அரசாங்கத்தார்க்கும், தத்தம் பாடல்களைச் சேர்த்துக் கொள்ள அநுமதி அளித்த திரு. தேசிக விநாயகம் பிள்ளை அவர்கள், திரு. நாமக்கல் இராமலிங்கம் பிள்ளை அவர்கள் ஆகிய இவர்களுக்கும் எங்கள் நன்றி உரித்தாகுக. இந்த நூலை வெளியிட்டு உதவிய பத்மா பப்ளிஷிங் கம்பெனியாரை என்றும் மறவோம்.

சிறந்த முறையில் எளிய நடையில் முதல் படிவத்துக்கு ஏற்றபடி அமைந்துள்ள இந்த நூலை முதல் படிவத்து மாணவர்கள் படித்துத் தமிழ் மொழியில் அறிவு வளரத் தமிழ்த்தாய் அருள்புரிவாராக.

ஆசிரியர்கள்.

# பொருள் அடக்கம்

## உரைநடை

## செய்யுள்



இமயமலைத் தொடர்
திபெத் நாடு
கைபர் கணவாய்
போலன் கணவாய்
சிந்து நதி
கஞ்சன் ஸருங்கம்
எவரெஸ்ட்டு
யமுனை
கங்கை
விந்திய மலை
சாத்பூரா
கோதாவரி
காவிரி
இலங்கை
அரபிக் கடல்
வங்காள விரிகுடா
இந்திய சமுத்திரம்

# முத்தமிழ் வாசகம்

## முதல் படிவம்

(பொதுப் பகுதி)

உரைநடை

## 1. நமது நாடு

நாம் வாழும் நாடு, நமது நாடு. ஒரு நாட்டிற்கு நீர்வளமும், நிலவளமும் முக்கியமாக இருக்கவேண்டும். இவ்விரண்டு வளமும் நம்முடைய நாட்டில் அமைந்துள்ளன. இவ்விரண்டு வளத்தில் முதலில் கூறிய நீர்வளம், நம் தமிழ் நாட்டில் எவ்வாறு அமைந்திருக்கின்றது என்று நாம் பார்ப்போம்.

பாலாறு, பெண்ணையாறு, காவிரி, வைகை, பொருநை என்னும் ஆறுகள் பலவும் இந்த நாட்டில் ஓடுகின்றன. இந்த ஆறுகள், தாம் பாயும் இடங்களை நீர்வளமுடையனவாகச் செய்கின்றன.

இந்த ஆறுகள், தம்மிடம் வெள்ளம் ஓடுங்காலம் தவிர மற்றக் காலங்களில் ஊற்று நீரால் உலகை ஊட்டுகின்றன; "தொட்டனைத்தூறும் மணற்கேணி" என்ற திருவள்ளுவர் வாக்குப்படி ஊற்று நீரை உதவுகின்றன. ஆறுகள், அடிசுடும் அந்நாளிலும் ஊற்றுப்பெருக்கால் உலகு ஊட்டும் என்பது உண்மை மொழி அல்லவா? மக்கள் உயிர் வாழ்க்கைக்கு வேண்டிய தண்ணீரை

நிரம்ப உதவக்கூடிய ஆறுகள், நாட்டுக்கு வேண்டிய முதல் உறுப்பாகும். இந்த வகையில் ஆறுகளை நிரம்பப் பெற்றுள்ள நம் தமிழ்நாடு, மிகவும் சிறந்த நாடாகும்.

ஆறுகள் மூலமாகவும், ஆறுகளிலிருந்து தோண்டியுள்ள வாய்க்கால்கள் வழியாகவும், வண்டல் மண்ணும், எருவும் நிலங்களில் படிகின்றன. அப்பொழுது நிலம், நிரம்ப வளமுடையதாகின்றது. இந்த நிலங்களில் வளரும் பயிரின் கதிர்கள், ஒரு முழநீளம் நீண்டு நெல் மணிகளை உதவுகின்றன. ஒரு நெற்கட்டு, மூன்று கலம் தானியத்தைத் தருகின்றது. இதனை,

"கதிரோரு முழமே நீளும் கட்டு முக்கலமே காணும்"

என்ற பாடல் பகுதி, தெரிவிக்கின்றது.

இவ்விதச் செழிப்புள்ள நமது நாடு, முற்காலத்தில் இமயம் வரையில் பரவியிருந்ததாகத் தெரிகிறது.

அக்காலத்திற்குப்பின் நம் தமிழ் நாடு, தனக்கு ஒரு எல்லையையுடையதாயிற்று. அந்த எல்லை, வடக்கே வேங்கடமலையையும், தெற்கே குமரி முனையையும், கிழக்கிலும், மேற்கிலும், இரு கடல்களையும் கொண்டதாகும். இப்பகுதி, தெற்கே போகப் போகக் குறுகியமைந்துள்ளது. இந்த அமைப்பைப் படத்தில் நாம் காணலாம்.

இந்த எல்லைக்குட்பட்ட நமது நாட்டை மூன்று பிரிவாகப் பகுத்து மூன்று தமிழ் வேந்தர், ஆண்டனர். இவ்வேந்தர்களுக்குச் சேர சோழ பாண்டியர் என்று பெயர். இவ்வேந்தர் தமிழ்வேந்தர் என்று அழைக்கப்படுவர். இவர்கள், தாமும் தமிழ் மொழியைக் கற்றுப் பிறரையும் நன்கு கற்கும்படிச் செய்தனர். நற்குணங்கள்

பலவும், இவரிடம் அமைந்திருந்தன. இம்மன்னர்கள், தமிழ்ப்புலவர்களைப் போற்றிவந்தனர்; மக்களைப் பசியும் பிணியும் அணுகாதபடிக் காத்துவந்தனர்.

இவ்வேந்தர்கள், நம்நாட்டில் வேளாண்மையையும், கைத்தொழிலையும் வளர்த்துவந்தனர். நமது நாட்டில் பற்பல தொழில்கள் நடைபெறினும் அவற்றுள் வேளாண்மையே முதன்மையானது. மக்கள் வாழ்க்கைக்கு வேளாண்மையே இன்றியமையாத தொழிலாகும். நம் நாடெங்கும் இத்தொழிலைக் கைக்கொண்ட வேளாளர் பலர், இப்பொழுதும் வாழ்ந்து வருகின்றனர். “ஓதுவான் எல்லாம் உழுவான் தலைக்கடையில்” என்ற மொழி, பொன்மொழி யன்றோ? மேலும், “உழுதுண்டு வாழ்வதற்கு ஒப்பில்லை கண்டீர்” என்றபடி வேளாண்மைக்கு ஒப்பான ஒரு தொழில், வேறில்லை.

இதற்கு அடுத்த தொழில், நெய்தல் தொழிலாகும். இத்தொழிலில் நம்நாடு, பேர்போனதாகும். பட்டினாலும், பஞ்சினாலும், ஆட்டு ரோமங்களாலும், எலி மயிரினாலும் ஆடைகள் மிக நேர்த்தியாக நம் நாட்டில் நெய்து வந்த வரலாறுகளை நம் தமிழ் நூல்கள், பற்பல இடங்களில் விளக்குகின்றன. வாணிகத் தொழில், நம் நாடெங்கும் பற்பல நகரங்களில் நடந்துவந்தது. சோழநாட்டில் **காவிரிப்பூம் பட்டினம்**, இவ் வாணிகத்தில் சிறந்து விளங்கியது. மேற்குக் கடற்கரை ஓரத்தில் **தொண்டி** என்னும் நகரம், சேர நாட்டின் துறைமுகப் பட்டினமாக விளங்கியது. பாண்டிய நாட்டில் **கொற்கை** என்னும் நகரம், துறைமுகப் பட்டினமாகும்.

நம் தமிழ் நாட்டிலிருந்து ஏற்றுமதியாகும் சரக்குகளை எதிர்பார்த்து வாழ்ந்த மேல் நாடுகள் பல. அப்

பொழுது பருத்தியிலிருந்து விளையும் பஞ்சிற்குத் தாயக மாக நம்நாடு, விளங்கியது.

நம் நாட்டில் உழைப்பாளிகள், பலர் வாழ்ந்தனர். அவருடன் அறிவாளிகளும் நிரம்ப இருந்தனர். தமிழ், இயல்தமிழ், இசைத்தமிழ், நாடகத்தமிழ் என்று மூன்று வகையாகப் பிரிக்கப்பட்டுள்ளது. ஒவ்வொருவகையிலும் தலைசிறந்த புலவர்கள், இங்கு வாழ்ந்தனர். இம்மூவகை யிலும் வல்லவர் பலர், அக்காலத்தில் உண்டு. ஆகவே, நம் தமிழ்நாடு, மேற்கூறிய செல்வங்கள் பலவற்றுடன் கல்விச் செல்வமும் நிறைந்திருந்தது.

கல்வி, இருபாலார்க்கும் உரியதாய் இருந்தது. பெண்பால் புலவரும் இங்கு வாழ்ந்து வந்தனர். ஔவையார், காக்கைபாடினியார், வெண்ணிக்குயத்தி யார், நப்பசலையார், பெருங்கோப்பெண்டு முதலியோர், செய்யுள்பாடும் நல்ல திறமை படைத்தவர் ; ஆண்பாலா ரில் கபிலர், பரணர், கம்பர், திருவள்ளுவர், இளங்கோ வடிகள் போன்ற நாவலர்கள், நிரம்பியிருந்தனர்.

இப்புலவர்கள் பலரும், " கற்றபின் நிற்க அதற்குத் தக" என்றபடி ஒழுக்கக் குறைவில்லாதவராய் வாழ்ந்த வர். இவர்கள், நாட்டு மக்களைத் தம் இன்மொழிகளால் நன்னெறியில் திருப்பி அறம், பொருள், இன்பம், வீடு என்ற இந்நான்கின் தன்மைகளை எடுத்துரைத்து நல் வழியில் நடக்கச் செய்தனர். நம் நாட்டு மக்களுக்கு இவர் களிடம் நல்ல மதிப்பு இருந்தது. இப்புலவர்கள் சொற் படி மக்கள், நடந்துவந்தனர். இதனால், பெரியாரைத் துணைக்கொண்டு நடந்த நாடு நம் நாடு என்பது தெரிய வருகின்றது. நம் நாட்டு மக்கள்,

" தம்மில் பெரியார் தமரா ஒழுகுதல்
வன்மையுள் எல்லாம் தலை "

என்ற வள்ளுவர் வாக்கைப் பின்பற்றிய மேன்மக்களாக வாழ்ந்து வந்தனர்.

இறைவனை வாயாரப்பாடி வழிபட, நம் முன்னோர்கள், தேவாரம், திருவாய்மொழி, திருவாசகம், திருமந்திரம் முதலியவற்றைப் பாடிச்சென்ற நாடும் நம் நாடேயாகும். நாட்டுப்பற்றும், மொழிப்பற்றும் நம் நாட்டினர்க்கு எப்பொழுதும் உண்டு. இறைவன் உண்டு என்ற கொள்கையார் மிகுந்திருந்த நாடு, நம் நாடேயாம். " ஆலயந் தொழுவது சாலவும் நன்று " என்ற பாடலின் உட்பொருளை நம்மவர், நன்கு அறிவர். மத வேறுபாட்டால் நம்மவர், வெவ்வேறு கடவுளைத் தொழுதுவரினும் இறைவழிபாட்டைக் கைவிடவே மாட்டார்.

நாமும், நம் நாட்டினிடம் தக்க மதிப்புடையவராய் " நாமிருக்கும் நாடு நமதென்ப தறிந்தோம் " என்ற எண்ணத்துடன் வாழ்தல் வேண்டும்; நாட்டின் முன்னேற்றத்திற்கு வேண்டிய வழிகளைத்தேடி ஒழுக்கமுடையவராய் வாழ்தல் வேண்டும்.

## குறிப்புரை

பொருநை - தாமிரவருணி. தொட்ட - தோண்டிய. அனைத்து-அவ்வளவு. கேணி-நீர்நிலை. போற்றி-காப்பாற்றி. பிணி-நோய். தக-தக்கபடி. இன்மொழிகள் - இனிய மொழிகள். தமர் - தம்மைச் சேர்ந்தவர். வன்மை - வலிமை. தலை - முதன்மை. ஆலயம் - கோவில். இறை - கடவுள்.

## வினாக்கள்

1. நம் நாட்டில் ஓடும் ஆறுகள் எவை?
2. நம் நாடு நிலவளம் பெறக் காரணம் யாது?
3. தமிழ்நாட்டு எல்லையைக் குறிப்பிடுக.
4. நம் நாட்டில் முதன்மையான தொழில் எது?
5. தமிழ் வேந்தர்களின் குணங்கள் எவை?
6. நம் நாடு சிறந்தது என்பதற்கு ஆதாரம் தந்து விளக்குக.

## இலக்கணம்

வாக்கியம் : கருத்து முடிந்து நிற்கும் சொல் தொடர்.

'நீர்வளம், தமிழ் நாட்டில் அமைந்திருக்கிறது'. இது ஒரு வாக்கியம்.

இந்த வாக்கியத்தின் எழுவாய் : நீர்வளம்

பயனிலை : அமைந்திருக்கிறது.

இதில் நீர்வளம் என்பது பெயர்.

அமைந்திருக்கிறது என்பது வினை.

## பயிற்சி

இந்தப் பாடத்தில் உள்ள நான்கு வாக்கியங்களை எடுத்து எழுதிப் பெயர், வினைகளைக் குறிப்பிடுக.

# 2. காந்தியடிகள்

உலகில் காந்தியை அறியாதவர், இருக்கமாட்டார்; இவர், இந்திய மக்களை ஒற்றுமைப் படுத்தியவர்; இந்தியாவை ஆங்கில ஆட்சியிலிருந்து விடுவித்தவர்; இந்தியாவுக்குச் சுதந்தரத்தைக் கொடுத்தவர்; இவர் கொண்டிருந்த கொள்கைகள் இரண்டு; ஒன்று, உண்மை; மற்றொன்று, ஒருயிரையும் துன்புறுத்தாமை. உள்ளத்தால் தூய்மை யடைந்திருத்தல் உண்மையாம்; வாயால் தூய்மை யடைதல் வாய்மையாம்; உடம்பால் தூய்மையடைதல் மெய்ம்மையாம்; இம்மூன்று வித உண்மைகளையும் கொண்டவர் மகாத்மா; உயிர்களைத் துன்புறுத்தாமையை அவரும் கைக்கொண்டு, பிறர்க்கும் உபதேசித்தார்.



மகாத்மா காந்தியடிகள்

“ ஒன்றாக நல்லது கொல்லாமை ; மற்றதன்
பின்சாரப் பொய்யாமை நன்று ”

இத்திருக்குறள், இக்கருத்துக்கள் இரண்டையும் தன்னுள் அடக்கிக்கொண்டுள்ளது.

இவர் முழுப் பெயர், மோகனதாஸ் கரம்சந்து காந்தி என்பது. இவர், 1869-ம் ஆண்டு அக்டோபர் மாதம் 2-ம் தேதியன்று போர்பந்தரில் பிறந்தார். காந்தியடிகளின் தந்தையார் கபா காந்தி என்ற பெயருடையவர்; இவர், போர்பந்தர் சமஸ்தானத்தில் திவானாக இருந்தார். திவான் குடும்பத்தில் சீரும் சிறப்பும் பெற்று இளமையில் காந்தி, வளர்ந்து வந்தார். இவர், இளமையில் பள்ளிக்கூடம் சென்று கல்வியைக் கருத்துடன் படித்து வந்தார். இவர், இளம்பருவத்தில் ஒருநாள் பெற்றோரிடம் அநுமதி பெற்றுக் கொண்டு அரிச்சந்திர நாடகம் பார்க்கப் போனார். உண்மைக்காக அரிச்சந்திரன் பட்ட துன்பம், இவர் மனத்தில் நன்றாக ஊன்றிவிட்டது; அன்று முதல் உண்மையிலிருந்து விலகாதிருக்க முடிவு கொண்டார்.

காந்தியடிகளுக்கு அரிச்சந்திரன் கதையைப்போல பிரகலாதன் கதையும் பிடித்தமானது; பிரகலாதன் உறுதியை எண்ணி எண்ணிச் சத்தியாக்கிரகத்தின் சக்தியைக் கொண்டாடுவர். இவர், பிற்காலத்தில் பிறரிடம் பிரகலாதனையே மேற்கோளாக எடுத்துக்காட்டிப் பேசுவதும் உண்டு. இவர், 1887-ம் ஆண்டில் மெட்ரிகுலேஷன் பரீட்சையில் தேர்ச்சி பெற்றார்; பின்பு ஒரு கலாசாலையில் சேர்ந்து முதல் ஆண்டு படிப்பை முடித்தார்; கலாசாலைப் படிப்பில் இவருக்கு விருப்பமில்லை; ஆங்கில நாட்டிற்குச் சென்று வழக்கு அறிஞராகி விடலாம் என்று எண்ணினார். 1888-ஆண்டில் இவர், பம்பாய்த் துறைமுகத்தை விட்டுப் புறப்பட்டார்; இங்கிலாந்தில் ஸௌதாம்டன் துறைமுகத்திலே போய் இறங்கினார்.

இங்கிலாந்தில் தாதாபாய் நௌரோஜி என்ற பார்ஸி தேசபக்தர், சிறந்த பேர் படைத்திருந்தார். டாக்டர் மேத்தாவும், அங்கிருந்தார். இவர்களிடம் சென்று காந்தி பழகி வந்தார். இவர், இங்கிலாந்தில் வாழ்ந்து வரும்பொழுது பகவத்கீதையைப் படிக்கத் தொடங்கினார்; பின்பு இவர், பைபிள் கற்கத் தொடங்கினார். கடவுள் வழிபாடு, பிரார்த்தனை முதலியவற்றில் இவருக்கு நம்பிக்கை ஏற்பட்டது, இவர், 1819-ம் ஆண்டு சிறந்த வழக்கு அறிஞர் ஆனார்; அந்த ஆண்டில் ஜூன்மீ 12உ இந்தியாவுக்குப் புறப்பட்டார்; பம்பாயை வந்தடைந்தார்; இந்தியா வந்தபின், வழக்கு அறிஞர் தொழிலை ஏற்றுக்கொண்டார்; இரண்டு ஆண்டிற்குப் பின்பு 1893-ம் ஆண்டு தென்னாப்பிரிக்காவுக்குச் சென்றார்.

அங்கு நம் இந்தியர்கள் படும் அவமானத்தையும், செய்யும் இழிதொழிலையும் காந்தி நேரில் கண்டார். அந்த இந்தியர்கள் பொருட்டு இவர் நிரம்பப் பாடுபட்டார்; அவர்களை முன்னேற்றப் பல முயற்சிகள் எடுத்தார். காந்தி ஏழை மக்களுக்குத் தலைவரா யிருந்த பொழுது அரசாங்கத்தார், இவரைச் சிறையிலடைத்தனர்.

பின்பு, இவர் இந்தியாவிற்கு வந்தார். பஞ்சாப் படுகொலை, காந்தியின் உள்ளத்தைப் புண்படுத்தியது. இந்தியா சுதந்தரம் அடையவேண்டுமென்று இவர், எண்ணினார். இவர், இந்நாடு சுதந்தரமடைய முயற்சி எடுத்ததுடன் இந்து முகம்மதிய ஒற்றுமை, கள்குடி ஒழிப்பு, தீண்டாமை அகற்றுவது, அயல்நாட்டு ஆடையை அணிந்து கொள்ளாமல் விலக்குவது இவ்

வகைகளில் உழைக்கத் தொடங்கினர். இவ்வாறு இவர் மக்கள் பொருட்டுப் பாடுபட முன்வந்தவுடன் அரசாங் கத்தார், இவரைச் சிறையிலிட்டனர். இவர், எரவாடா சிறையிலிருந்த பொழுது நோய்வாய்ப்பட்டார். அப் பொழுது இவர், பூனு வைத்தியசாலைக்கு அழைத்துச் செல்லப்பட்டார்.

காந்திஜி, 1929-ம் ஆண்டில் உப்புச் சத்தியாக்கிரகம் செய்யத் தொடங்கினர். இவர், உப்பு காய்ச்சத் தொடங்கிய பொழுது மறுபடியும் சிறையில் அடைக்கப் பட்டார். காந்தி, இரண்டாவது வட்டமேஜை மாநாட்டி லிருந்து வந்தவுடன் ஒருமுறையும், அதன்பின் பற்பல முறையும் சிறைக்குச் சென்ருர். காந்திஜியின் மனைவி, 1944-ம் ஆண்டு சிறையிலிருக்கையில் காலமானர். காந்தி, காய்ச்சலால் பீடிக்கப்பட்டுச் சிறையினின்றும் விடுவிக்கப்பட்டார்.

1947-ம் ஆண்டு ஆங்கில அரசாங்கத்தார், தாங்கள் இந்தியாவை விட்டு வெளியேறத் தீர்மானம் செய்திருப் பதை அறிவித்தனர். அதன்பின் பஞ்சாபிலும், வட மேற்கு எல்லை மாகாணத்திலும் கலகங்கள், தோன்றின. அப்பொழுது காந்தி, அந்த அந்த இடங்களுக்கு நேரில் சென்ருர் ; கிழவராக இருந்தும் கால்நடையாகவே கிராமந்தோறும் சென்ருர் ; மதவெறியும், பிடிவாதமும், மூர்க்கமும் நிறைந்த இடங்கட்கு நேரில் போய் அங்கு அன்பும், அமைதியும், சாந்தமும் உண்டாகும்படிச் செய்தார்.

1947-ம் ஆண்டு ஆகஸ்டுமீ 15-ம் தேதி நமது இந்தியா, சுதந்தரம் அடைந்தது; அவருடைய ஒரு ஆசை,

கைகூடிற்று ; மற்றொரு விருப்பமான இந்து முகம்மதிய ஒற்றுமை, ஏற்படவில்லை ; 1948-ம் ஆண்டு ஜனவரிமீ 30-ம் தேதி மாலை பிரார்த்தனை நடத்துமிடத்திற்கு இவர் வந்தார் ; அப்பொழுது கூட்டத்திலிருந்து ஒருவன், வந்து காந்தி அடிகளைச் சுட்டுக் கொன்றுவிட்டான். இப்படி இவரைக் கொன்றவன், ஒரு இந்து ; இவர் இந்துக்களுக்குப் பகையாக இருந்துகொண்டு முகம்மதியர்கள் பக்கம் பாடுபடுகிறார் என்று அவன், தவறாக எண்ணி இப்படிச் செய்தான்.

காந்தியடிகள், இறந்தும் கோடிக்கணக்கான மக்கள் உள்ளங்களில் வாழ்ந்து வருகிறார். மக்கள் பிறப்பில் இவரைப்போல் பிறப்பெடுக்க வல்லவர் யார் ? இவர், தமக்கென்று பாடுபடாதவர் ; பிறர்க்கே ஒவ்வொரு நாளும் பாடுபட்டவர் ; காந்தியடிகளுக்குத் தமிழ் மக்கள் மேலும், தமிழ்மொழி மேலும் நிரம்ப ஆசையுண்டு. இவர், தென்னாப்பிரிக்காவில் இருந்தபொழுது தமிழ் மொழி மேல் விருப்பம் கொண்டு கற்கத் தொடங்கினார். இவர், “நான் தமிழ் கற்கத் தொடங்கிய, காரணம் திருக்குறள் கற்கவேண்டுமென்று என் உள்ளத்தில் எழுந்த விருப்பமாகும்” என்று ஒரு கூட்டத்தில் பேசும்பொழுது தெரிவித்திருக்கிறார். இவர், நம் தமிழ் மொழியில் கை எழுத்து இடுவதும் உண்டு. இப்படிப்பட்ட சிறந்த பெரியாரைத் தமிழகமும், உலகமும் ஒரு நாளும் மறக்க முடியாது. இவர் ஒழுக்கத்தையும், உபதேசத்தையும் நாம், பின்பற்றி நடக்க முயற்சி எடுப்போமாக.

## குறிப்புரை

தூய்மை - சுத்தம். கொல்லாமை - கொலை செய்யாமை. பொய்யாமை - பொய் சொல்லாதிருத்தல். சத்தியாக்கிரகம் - உண்மையை உறுதியாகப் பிடித்தல். பைபிள் - கிறிஸ்தவர் வேதம். அவமானம் - மானக் குறைவு. மூர்க்கம் - தீயவழியில் பிடிவாதம். தமிழகம் - தமிழ் நாடு.

## வினாக்கள்

1. மகாத்மா, பிறந்த ஆண்டு, ஊர், தந்தை பெயர் இவற்றை எழுதுக.

2. இவர், கொண்டிருந்த கொள்கைகள் எவை?

3. காந்தி, உண்மையைக் கைக்கொள்ளக் காரணமாக இருந்த கதை எது? அக்கதையின் தலைவன் யார்?

4. 'காந்தி ஏழைக்குப் பாடுபடுபவர்' இதனை விளக்குக.

5. இவர், தமிழ் மொழியிடம் விருப்பம் உடையவர் என்று எப்படி அறிவீர்?

6. காந்தியடிகள், தமிழ் கற்கத் தொடங்கிய காரணம் யாது?

## இலக்கணம்

பெயர்ச் சொற்கள், பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில் என்ற ஆறுவகைகளில் வரும்.

'காந்தியடிகள் 1869-ம் ஆண்டில் போர்பந்தரில் பிறந்தார்'.

இதில் ஆண்டு என்பது காலப்பெயர்.
போர்பந்தர் என்பது இடப்பெயர்.
'காந்தி இராட்டினத்தில் கையால் நூற்பார்'.
இதில் இராட்டினம் என்பது பொருள் பெயர்.
கை என்பது சினைப்பெயர்.

'காந்தி, உண்மை, கடவுள் வழிபாடு இவற்றைக் கைக்கொண்டவர்.'

இதில் உண்மை என்பது குணப்பெயர்.

வழிபாடு என்பது தொழிற்பெயர்.

ஆறுவகைப் பெயர்களும், மேற்காட்டிய உதாரணங்களில் வந்துள்ளன.

## பயிற்சி

இந்தப் பாடத்தில் மேற்கண்ட ஆறுவகைப் பெயர்களுள் சிலவற்றை எடுத்து எழுதுக.

——

# 3. நூல் நிலையம்

உலகில் மக்களாய்ப் பிறந்த நாம், கல்வியின்றி வாழ முடியாது. கல்வி கற்காமல் வருந்துபவர், உலகில் எத்தனையோ பேர் இருக்கிறார்கள். "பிச்சை புகினுங் கற்கை நன்றே" என்பது சான்றோர் மொழி. ஒருவன், எத்துணைத் துன்பம் வரினும் கல்வியைக் கைவிடலாகாது. கல்வியற்றவர் படுந் துன்பங்களைக் கண்டு அரசியலார், கல்வியை வளர்க்க அரும்பாடுபட்டு வருகின்றனர்; அவற்றுள் நூல் நிலையங்கள் அமைத்தலும் ஒன்றாகும்.

நூல் நிலையங்களால் மக்கள், பல நன்மைகளை அடைகின்றனர். நூல் நிலையங்கள், இரு வகைப்படும். (1) பள்ளி நூல் நிலையம்; (2) பொது நூல் நிலையம். ஒவ்வொரு பள்ளிக்கூடத்திலும் நூல் நிலையம் ஏற்படுத்த வேண்டுமென்று அரசியலார், கட்டளை பிறப்பித்துள்ளனர். பள்ளியிலுள்ள ஒவ்வொரு மாணவரும், நூல் நிலையத்திலுள்ள நூல்களைப் படிப்பதால் அறிவு பெருகிப் பல நன்மைகளை அடையலாம்.

ஒவ்வொரு நூல் நிலையத்திலும் பல பாடங்களைப் பற்றிய நூல்கள் இருக்கும். கலை, விஞ்ஞானம், தமிழ், ஆங்கிலம், சமூக அறிவு, ஆராய்ச்சி போன்ற பலதிறப்பட்ட நூல்களும் அங்கு இருக்கும். தவிர, இளஞ் சிறுவர்க்கே உரியதான நீதி புகட்டும் கதைகள், படக் கதைகள் போன்றவையும் இருக்கும். இங்ஙனம் பல திறப்பட்ட மாணவர்க்கும் பயன்படும் பலவகையான நூல்களும் நூல் நிலையத்தில் இருப்பதால், இளம் பருவத்திலுள்ள எல்லா மாணவரும் அங்குள்ள நூல்களைப் படித்து இன்புறலாம்.

தவிர, அப்பள்ளியின் ஆசிரியருக்கும் பயன்தரக் கூடிய ஆராய்ச்சி நூல்களும் அங்கு இருப்பதால் அவர்களும் சென்று படிக்கலாம். மகாத்மா காந்தி, தாகூர், பாரதியார் போன்ற இந்தியப் பெரியார்களின் வாழ்க்கை வரலாறுகளும், நூல் நிலையங்களில். இருக்கும். அவற்றைப் படிக்கும் மாணவர்க்கு, அவர்களுடைய வாழ்க்கை வரலாறுகள், இளமையுள்ளத்தில் பதிந்து, பிற்காலத்தில் பயன் தரக்கூடும். மாணவர் பல புலவர்களின் கவிகளையும் படித்து இன்புறலாம்.

நூல் நிலையங்களில் உள்ள நூல்களைப் படிப்பதால் மாணவர், மௌன வாசிப்புப் பயிற்சியையும் அடைகின்றனர். இங்ஙனம் அவர் மௌனமாக வாசிப்பதால் அந்நூலில் உள்ள கருத்துக்களும், அவர் மனத்தில் நன்கு பதிகின்றன.

பொது நூல் நிலையங்களினால் எல்லா மக்களும், படித்துப் பயன் அடைகின்றனர். புத்தகங்கள் வாங்குவதற்குப் பணமில்லாதவர், இலவச நூல் நிலையங்களில் படிப்பதால் நிரம்பப் பயன் பெறுகின்றனர். பல•உயர்ந்த புலவரின் ஒப்பற்ற நோக்கங்களை அறிவதற்கும், பல பெரியோர்களின் வாழ்க்கையில் அமைந்து கிடக்கும் உண்மைகளை அறிவதற்கும், இலவச நூல் நிலையங்கள், நிரம்பப் பயன் படுகின்றன. சென்னை போன்ற பெரிய நகரங்களில் பல இலவச நூல் நிலையங்கள், இருக்கின்றன. அவற்றில் நூல்களேயன்றி மாத, வார, தினசரிப் பத்திரிகைகளும் வரவழைக்கப்படும். அவற்றால், மக்கள் அரசியல் விஷயங்களேயன்றி, ஆங்காங்கு நிகழும் பொது விஷயங்களையும் அறிந்துகொள்ளலாம்.

பொது நூல் நிலையங்களில், பெரிய நூல்களை, வாரத் தவணை, இரு வாரத் தவணைகளிலும் கொடுப்பதுண்டு. மக்கள், ஒழிந்த நேரங்களில் அவைகளைப் படிக்கக்கூடும். சென்னை போன்ற பெரிய நகரங்களிலுள்ள பொது நூல் நிலையங்களில் விருப்பமுள்ளவர், ஒரு குறிப்பிட்ட தொகையை முன்பணமாகச் செலுத்தி அங்கத்தினர் ஆகலாம்; பின்பு அவர், அங்கத்தினராக இருக்க விரும்பாதபோது, முன் கட்டிய பணத்தைத் திரும்பப் பெற்றுக் கொள்ளலாம். மேலும், பல உயர்ந்த கல்விகளைக் கற்க விரும்பும் ஒருவன், புத்தகங்கள் வாங்க முடியாமலிருந்தால், இவ்வகை நூல் நிலையங்களில் அங்கத்தினர் ஆகலாம். பின்பு, அவன், படிப்பு முடிந்தபின், முன்பணத்தைத் திரும்பப் பெற்றுக்கொள்ளலாம். நூல் நிலையத்தினால் ஒருவன், எவ்வளவு எளிதாகக் கல்வியைக் கற்றுக் கொள்ளலாம் பாருங்கள் !

நகரங்களில் உள்ளவர்கள், இவ்வகை நூல் நிலையங்களில் உள்ள நூல்களைப் பயன்படுத்திக் கொள்ளுகின்றனர். அவ்வாறே கிராமத்திலுள்ளவர்களும் பயன் பெறுவதற்காக வண்டிகளில் நூல் நிலையங்களை அமைத்து, அவற்றை ஊரூராகக் கொண்டு செல்வதுமுண்டு. இவ்வகை நூல் நிலையங்களினால், நகரங்களுக்கு நெடுந்தூரத்திலுள்ள கிராமங்களில் வசிப்பவரும், இலவசமாக நூல்களை வாங்கிப் படித்து அறிவு பெறலாம்.

இவ்வித நடமாடும் நூல் நிலையங்களிலும் முன்பு கூறியதுபோல் முன் பணம் கட்டி உறுப்பினராதல் வேண்டும். இவ்வகையான நூல் நிலையங்களாலும் ஒருவன், உயர்ந்த கல்வியைப் பெறலாம். அரசியலார், பல நூல் நிலையங்களைப் பலர்க்குப் பயன்பட அமைத்து,

இருப்பதால் எல்லோரும் கல்வியைக் கற்றுக்கொள்ள இடம் ஏற்படுகிறது. சென்னையிலுள்ள கன்னிமாரா நூல் நிலையமும், பல்கலைக் கழக நூல் நிலையமும் பலர்க்குப் பெரிதும் கல்வியறிவை அளித்து வருகின்றன. இப்படிப் பல நூல் நிலையங்கள் ஆங்காங்கு ஏற்படுமானல், மக்கள் அனைவரும் கல்வி அறிவைப் பெற்று, நாடு உயர்ந்த நிலையை அடையும்.

## குறிப்புரை

எத்துணை – எவ்வளவு. கட்டளை - உத்தரவு. கலை - சாத்திரம். பலதிறம் - பலவகை. வரலாறு – சரித்திரம். கவி - செய்யுள். உறுப்பினர் - அங்கத்தினர். இவ்வகை – இவ்விதம்.

## வினுக்கள்

1. நூல் நிலையங்கள், எத்தனை வகைப்படும்? அவை எவை?

2. நூல் நிலையங்களில் எவ்வகையான புத்தகங்களிருக்கும்?

3. கிராம மக்களுக்கு எவ்வித நூல் நிலையங்கள், பயன்படுகின்றன?

4. சென்னையிலுள்ள பெரிய நூல் நிலையங்கள், எவை?

5. நூல் நிலையங்களால் மக்கள் அடையும் பயன்கள், எவை?

## இலக்கணம்

| | | |
|---|---|---|
| தன்மை | நான் அங்கு வருவேன் | — ஒருமை |
| | நாம் அங்கு வருவோம் | — பன்மை |

முன்னிலை } நீ ஊருக்குச் செல்வாய் — ஒருமை
நீங்கள் பள்ளிக்குப் போவீர் — பன்மை

படர்க்கை } அவன் நாளைக்கு வருவான் — ஒருமை
அவள் பாட்டுப் பாடுவாள் — ஒருமை
அவர்கள் நன்ருய் விளையாடுவார்கள் — பன்மை
அது விரைந்து ஓடிற்று — ஒருமை
அவை படுத்து உறங்கின — பன்மை

## பயிற்சி

இவற்றுள் ஒருமை பன்மைகளில் வினைச்சொற்கள் எவ்வாறு வேறுபடுகின்றன என்று நீங்கள், கவனித்துப் பாருங்கள்; கூவின, குடித்தது, படிப்பாய், ஓடுவாள், உண்டனர், பாடுவோம்—இவற்றிற்கு எழுவாய்கள் கொடுத்து எழுதிக் காட்டுக.

# 4. பாரிவள்ளல்

இவ்வுலகில் மக்கள் பலர், தோன்றுகின்றனர்; வாழ்க்கையை ஒருவாறு நடத்திக் கடைசியில் மறைகின்றனர். மக்களாகப் பிறப்பெடுத்தவர் ஒவ்வொருவரும், ஆறு அறிவுகளைப் படைத்தவரே ஆவர். மெய், வாய், கண், மூக்கு, காது, மனம் என்ற ஆறு உறுப்புக்களின் உணர்ச்சியே ஆறறிவு எனப்படும். ஆறுவது அறிவு, மன அறிவாகும். இம்மன அறிவு : இது நல்லது, இது தீயது என்று அறியும் பகுத்தறிவு ஆகும். பகுத்தறிவுடைய ஒவ்வொருவனும், பழி அடையாதவனாய்ப் புகழுடையவனாய் வாழ்தல் வேண்டும்.

புகழையடைய வழிகள் பல உண்டு; கல்வியால் புகழையடையலாம்; கொடையால் புகழையடையலாம்; வீரத்தால் புகழை யடையலாம். கொடையால் புகழையடைந்த வள்ளல்கள் பலர், நம் நாட்டில் வாழ்ந்தனர். இவ்வள்ளல்களில் கடை எழுவள்ளல்கள் என்று ஏழு வள்ளல்கள் இருந்தனர். அவர்கள் பெயர் : பாரி, காரி, ஓரி, நள்ளி, பேகன், ஆய், அஞ்சி என்பனவாகும். இந்த ஏழு வள்ளல்களுள் சிறந்த குணங்கள் பலவும் கொண்ட பாரி என்னும் வள்ளலைப் பாராட்டாதவர் இல்லை.

இவ்வள்ளல், பறம்பு மலையையும், அதைச் சேர்ந்த நாட்டையும் ஆண்டவன்; நற்குணங்கள் பலவும் ஒருங்கு படைத்தவன்; இவன் குணங்கள் பலவற்றையும் வென்றது இவன் கொடைக்குணம். இவன், தமிழ் நூல்களைக் கற்றுத் தமிழின் பெருமையை நன்கு அறிந்தவன்; தமிழ்ப்புலவர்களை நிரம்ப ஆதரித்தவன். தமிழ்ப்புலவர்

களுள் சிறந்த புலவராகிய கபிலர், இவனது அவைப் புலவராவர். பாரி, உண்மைக்கு இருப்பிடமான இப்புல வரைவிட்டுப் பிரியாதுவாழ்ந்தவன். இவன், தனக்கென்று ஒரு பொருளையும் வைத்துக்கொள்ளாதவன்; இவனை நாடிவந்த புலவர்கள் விரும்பிக்கேட்கும் பொருள்களை இல்லை என்று சொல்லாமல் வழங்கியவன் ; ஏற்பார்க்கு இல்லை என்னாத வள்ளல் நம் பாரியே ஆவான்.

இவன், முந்நூறு ஊர்களைக்கொண்ட பறம்பு நாட்டைச் சீர்பெற நீதிதவறாமல் ஆண்டவன் ; நாள் தோறும் இவனிடம் வந்த பரிசிலர்கள் கேட்க ஒவ் வொன்றாய் முந்நூறு ஊர்களையும், பரிசிலர்க்கே கொடுத்த அளவுகடந்த கொடையாளன். நம் நாட்டில் கன்னன் பெரிய கொடையாளி என்பர். அவன், தான் ஆண்ட அங்கநாடுமுழுவதையும், இரவலர்க்குக் கொடுத் தான் என்று நாம் கேட்டதில்லை. இதனால், பாரி கன்னனை விடச் சிறந்த வள்ளல் என்பது தெரிகின்றது.

இவன், ஒருநாள் தேரில் ஏறிக்கொண்டு தன் ஊர் நோக்கி வந்துகொண்டிருந்தான். இடைவழியில் ஒரு முல்லைக்கொடி, கொள்கொம்பில்லாமல் அலைந்தது ; அதை இவன் கண்டான் ; அதனிடம் பெரிதும் இரக்கங் கொண்டான். இவன் இரக்கங்காட்டுவது மக்களிடமும், விலங்கினிடமும் மட்டுமன்று ; தாவர உயிரும் தளர்ந்து வாடவிடாதவன்; அதைக் கண்டவுடன் ஐயோ! இதற்கு ஏறிப்படரக் கொம்பில்லையே என்று வருந்தினான் ; உடனே தன்தேரை அம்முல்லைக்கொடி ஏறிப்படரும்படி நிறுத்திவிட்டுத் தன் அரண்மனையை யடைந்தான்.

இதனால், இவன், தாவரங்களும் தளர்ந்து வாடக் கண்டால் இரக்கப்படுபவன் என்பது தெரியவரும்.

என்னே இவன் அருளின் தன்மை! இவனைப்போல் ஒரு வள்ளல் பேகன் என்றிருந்தான். அவன், ஒருநாள் மலைப் பக்கமாகப் போய்க்கொண்டிருந்தான். ஒரு மயில், ஆடிக் கொண்டிருந்தது. இப்பொழுது இவன், அதைக் கண்டு அது ஆடுவதை உற்றுநோக்கி, இது குளிரால்தான் இப்படி நடுங்குகிறது என்று எண்ணினான்; உடனே, அதன் குளிரைப் போக்கத் தான் போர்த்திருந்த விலை உயர்ந்த போர்வையை எடுத்து அம் மயிலுக்குப் போர்த்துவிட்டு வந்தான். இவ்வாறு பேகனைப் பற்றி ஒரு வரலாறு உண்டு. நாம் ஆலோசித்துப் பார்த்தால் இப்பேகனைவிட நம் பாரி, சிறந்தவன் ஆவான். எவ்வாறு என்றால், மயில் பறவை இனம்; மயிலுக்குப் போர்வை கொடுத்ததை விடத் தாவர இனத்தைச் சேர்ந்த முல் லைக்குத் தேர் கொடுத்த வள்ளல் சிறந்தவன் என்று எல் லோரும் ஒப்புக்கொள்வர்.

இந்தப் பாரிவள்ளல், நாடோறும் கபிலரோடு பழகி வந்தான். கபிலர், இவனுக்கு நற்போதனைகள் பல கூறி வந்தனர்; கபிலர் நற்போதனைகளால் பாரி, உள்ளம் தெளிந்து வாழ்வில் நிலையற்ற பொருள்களை அறிந்திருந் தான். செல்வம், இளமை, உடம்பு இவை நிலையற்றவை என்பதை இவன் நன்றாய் அறிந்திருந்தான்; அதனால், செல்வத்தைக் கொண்டு நிலையான புகழைத் தேடி வந்தான்.

பாரிக்கு அழகிய பெண்கள் இருவர், இருந்தனர்; அப்பெண்கள் கல்வியை நன்கு கற்றறிந்தவர்; செய்யுள் இயற்றும் திறமையுடையவர்; நற்குணங்கள், பலவும் இவரிடம் குடிகொண்டிருந்தன. இவர்களுக்கு மணம் புரியும் பருவம் வந்தடைந்தது. தமிழ் வேந்தர்களாகிய

சேர சோழ பாண்டியர்கள், முதலில் தனித்தனி பாரியிடம் பெண் வேண்டினர். அவ்வேந்தர்கள் நடந்துகொண்ட முறை, ஒழுங்காக இல்லை. ஆதலால், அவர்களுக்குப் பெண் தரப் பாரி, மறுத்துவிட்டான்.

செருக்குடைய அந்த மன்னர்கள் மூவரும், 'நாம் பெண் கேட்கக் குறுநில மன்னனான பாரி மறுத்தான் அல்லவா' என்று கோபங்கொண்டனர். உடனே, மூவரும் ஒன்று கூடித் தம் படைகளைத் திரட்டிக்கொண்டு போர் செய்ய வந்தனர். வந்த அம்மூவேந்தரும், பறம்பு மலையை முற்றுகையிட்டனர். இதைக்கண்ட பாரி, சிறிதும் அஞ்சாதவனாய்த் தன் படையோடு வந்து போர் செய்யத் தொடங்கினான். போர், பலநாள் நடந்து வந்தது. மூவேந்தர்க்கும், அவர்கள் படைகளுக்கும், பாரி வள்ளலும், அவன் படையும், பின் வாங்காமல் போர் செய்தனர். அந்த மன்னர்கள், வெற்றியடையாமலிருந்ததுடன், முற்றுகையிட்டிருந்ததையும் விடாமலிருந்தனர்.

கபிலர், அந்த மன்னர்களிடம் சென்று, "நீங்கள் மூன்று வேந்தரும் பலநாள் போர் செய்தும் பாரியை வெல்ல உங்களால் முடியவில்லை; இப்படிப் பலநாள் நீங்கள் முற்றுகை யிட்டிருப்பினும், எங்கள் நாட்டில் உணவுக்குப் பஞ்சமில்லை; எங்கள் மலையில் மூங்கிலில் நெல் விளையும்; வள்ளிக்கொடியிலுண்டாகும் கிழங்கிற்குக் குறைவில்லை; இங்கு உண்டாகும் பலாப்பழத்திற்கு அளவில்லை; இவற்றுடன் எங்கட்கு நிரம்பத் தேனும் கிடைக்கின்றது; எங்கள் வள்ளல் பாரியை உங்களால் வெல்ல முடியாது; அவன் நாட்டையடைய நீங்கள் விரும்பினால் உங்கள் மனைவியரை விறலியராக்கி, நீங்கள் பாணர்களாகப்

பாடிக்கொண்டு வருவீராயின் அவனே, உங்கட்குத் தன் அரசாட்சியை வழங்கி விடுவான் ," என்றார்.

இக்கபிலர் மொழியை அவர்கள், பொருட்படுத்தாமல் மீண்டும் போர் புரிந்தனர். ஆனால், வெற்றியடைய அவர்களால் முடியவில்லை. இவ்வரலாற்றினால் பாரியின் வீரம், நமக்குத் தெரியவருகின்றது.

இந்த மூன்று மன்னர்களும், தமக்குள் ஆலோசித்துப் பாரியை நேர் நின்று போர் செய்து வெல்ல முடியாது என்ற முடிவுக்கு வந்தனர் ; ஆகவே, சூழ்ச்சியால் வெல்லக் கருதினர். ஒருநாள் அவர்கள், தாம் எண்ணியபடியே வஞ்சனையால் பாரியைக் கொன்று விட்டனர்.

பாரி மாண்டபின் அவன் மகளிர் இருவரையும் கபிலர், அழைத்துக் கொண்டு சென்றார். அவர், பல மன்னர்களை அடைந்து அப்பெண்களை மணம் புரிந்து கொள்ள வேண்டினர் ; அவர்கள் மறுத்துவிடக் கடைசியில் அவர்களுக்கு மணம்புரிவிக்கும்படி அந்தணரை வேண்டி அவர்களிடம் அம் மகளிரை ஒப்புவித்தார். தன் உயிர் நண்பரைப் பிரிந்தபின் கபிலர், தம் வாழ்க்கையில் வெறுப்புடனிருந்து முடிவில் இறைவன் திருவடிகளை அடைந்தார்.

பாரி வள்ளல் வரலாற்றால் அவனுடைய பெருங்கொடையும், ஒப்பற்ற வீரமும் பாராட்டத் தக்கன என்று நாம் அறியலாம்.

## குறிப்புரை

உறுப்பு - அவயவம். அவை - சபை. ஏற்பார் - யாசிப்பவர். இரவலர் - பிச்சை எடுப்போர். இரக்கப்படுபவன் -

இரக்கங் கொள்பவன். உள்ளம் - மனம். செருக்கு - அகங்காரம். முற்றுகையிடுதல் - சூழ்ந்து கொள்ளுதல். விறலி - பாணன் மனைவி.

## வினாக்கள்.

1. பாரியிடமிருந்த குணங்களை வரைக.

2. 'பாரி முல்லைக்குத் தேர் கொடுத்தான்' இதனால் நீங்கள் அறிந்து கொண்டது என்ன ?

3. கபிலர், மூவேந்தரிடம் கூறிய மொழிகள் எவை ?

4. மயிலுக்குப் போர்வை கொடுத்தவன் யார் ?

5. பாரி, பேகன் இவர்கள் இருவரில் சிறந்த வள்ளல் யார் ? ஏன் ?

## இலக்கணம்

(1) கபிலர், பாரி மாண்டபின், 'நான் ஏன் உயிரோடிருக்கவேண்டும்' என்றார்.

(2) புலவர், பாரியை நோக்கி, 'நீ புகழோடு வாழ்வாய்' என்றார்.

(3) பாரி பெரிய கொடைவள்ளல்; அவன் புகழ் உலகு எங்கும் பரவிற்று.

முதல் வாக்கியத்தில் நான் என்னும் சொல், தன்னையே குறிப்பதால் தன்மைப் பெயராம். இரண்டாம் வாக்கியத்தில் நீ என்னும் சொல், முன்னிற்பவனைக் குறிப்பதால் முன்னிலைப் பெயராம். மூன்றும் வாக்கியத்தில் அவன் என்னும் சொல், பேசுவோன் கேட்போன் ஆகிய இருவரையுங் குறிக்காமல் பேசப்படுபவனைக்குறிப்பதால் படர்க்கைப் பெயராம்.

இவை, தன்மையிடம், முன்னிலையிடம், படர்க்கையிடம் ஆகிய இடங்களைக் குறிப்பதால் 'இடம்' என்று வழங்கப்படும்.

| ஒருமை | பன்மை | |
| --- | --- | --- |
| நான் | நாம், நாங்கள் | தன்மைப் பெயர்கள் |
| யான் | யாம், யாங்கள் | |
| நீ | நீர், நீங்கள் | முன்னிலைப் பெயர்கள் |
| அவன், அவள் | அவர், அவர்கள் | படர்க்கைப் பெயர்கள் |
| அது | அவை | |

## பயிற்சி

பின் வருவனவற்றில் தன்மை, முன்னிலை, படர்க்கை இடங்களைத் தனித்தனி எடுத்து எழுதுக.

யான், யாம், மக்கள், அவர், நீர், அவள், அரசன், பாண்டவர், அவை, நீ.

---

# 5. வானொலி

சிறு பிள்ளைகள், ஒரு நீர்நிலையை யடைந்ததும் ஒரு கல்லை எடுத்து நீரில் போடுவர். இவர்கள் கல்லைப் போட்டவுடன், கல்விழுந்த இடத்திலிருந்து படிப்படியாய் அலைகள் தோன்றும். அந்த அலைகள், வட்டமாகப் பரவி முடிவில் கரையை வந்தடையும். அந்த அலைகள், நீரில் உண்டாகும் அலைகள். இவ்வாறே நாம் எழுப்பும் பலவகைப்பட்ட ஒலிகள், வானவெளியில் ஒலி அலைகளாக எல்லாப் பக்கமும் பரவுகின்றன. அருகில் உண்டாகும் ஒலி, காதில் விழுகின்றது. சற்றுத் தொலைவில் உண்டாகும் ஒலி, நம் காதுகளில் விழுவதில்லை; தொலைவு அதிகப்படுமாயின், அடியோடு கேட்கப்படாமல் என்ன ஒலி உண்டாயிற்று என்பது அறியமுடியாமல் போகிறது.

ஆதலால், நெடுந்தூரத்தில் உண்டாகும் ஒலிகளைக் கருவிகளின் மூலம் அறிஞர், மின்சார அலைகளாக மாற்றி வானவெளியில் செலுத்துகிறார்கள். அந்த ஒலி அலைகள், வானவெளி எங்கும் பரந்தோடுகின்றன. இப்படிப் பரவிச் செல்லும் அலைகளை மின்சாரக் கருவியினால் ஒலி அலைகளாக வேண்டிய இடத்தில் சேர்க்கலாம். இவ்வாறு செய்யும் செய்கைக்கு ஒலி பரப்புதல் என்று பெயர். வானவெளியெங்கும் பரவி வரும் செய்திகளை ஒன்று கூட்டி உதவும் கருவிக்கு வானொலிப் பெட்டி (ரேடியோ) என்று பெயர்.

இக்காலத்தில் நகரங்களில் மட்டுமன்றிப் பற்பல ஊர்களிலும் இக்கருவிகள், மக்களுக்கு நிரம்பப் பயன்

படுகின்றன. இவற்றின் மூலமாக உடனுக்குடன் செய்திகள், உலகெங்கும் பரவுகின்றன. இவைகள், இனிய இசையுள்ள பாடல்களை மக்கள் செவிகளில் நிரப்புகின்றன. வானொலி, மக்களுக்குக் கணக்கற்ற நன்மைகளைச் செய்து வருகின்றது.

இவ்வாறு உலகத்திற்கு நிரம்பப் பயன்படக்கூடிய இந்தக் கருவியை இத்தாலி நாட்டுப் பேரறிஞரான "மார்க்கோனி" என்பவர், தம் ஆராய்ச்சியின் பயனாகை முதன்முதல் கண்டுபிடித்தார். அதன்பின், இந்த வழியில் இவரைப் பின்பற்றிப் பலர், பலவகையில் இக்கருவியை அமைத்தனர்.

இக்கருவியைக் கண்டு பிடிப்பதற்கு முன், ஒரு இடத்திலிருந்து மற்றோரிடத்திற்குச் செய்திகள் செல்லவேண்டுமாயின் பலநாள் செல்லும். கடல்களுக்கு அப்பால் இருக்கும் நாடுகளிலிருந்து செய்திகள் கிடைக்கப் பல நாட்கள் ஆகும். தற்காலத்தில் ஒரு வானொலிப்பெட்டியின் மூலம் ஒரே நேரத்தில் பல இடங்களிலிருந்தும் நிகழ்ச்சிகளை நாம் அறியலாம். நமக்கு எந்த இடத்திலிருந்து செய்திகள் அல்லது பாட்டுக்கள் வேண்டுமோ அவற்றை நாம் கேட்டறியலாம்.

உலகிலுள்ள எல்லா மக்களுக்கும் பயன்படக்கூடிய இக்கருவியைக் கண்டு பிடித்த மார்க்கோனிக்கு எல்லாப் பரிசுகளிலும் சிறந்த பரிசாகிய "நோபெல்" பரிசு வழங்கப் பட்டது. இவர் செய்த பெருந்தொண்டிற்கு நாம் எவ்வளவு கைம்மாறு செய்தாலும் போதாது. இவர் கண்டுபிடித்த கருவியின் வாயிலாக ஆயிரக்கணக்கான கற்களுக்கு அப்பாலுள்ள ஊர்களிலிருந்து செய்திகளை

நேரில் கேட்பது போல் நாம் அறிந்து கொள்கிறோம்; இலண்டன் மாநகரத்துச் செய்தியை உடனே சென்னையில் அறிகிறோம்; நாடுகள் பலவற்றையும் மக்கள் பலரையும் இக்கருவி, ஒரேகாலத்தில் ஒன்று சேர்க்கின்றது.

வானொலியின் வாயிலாகப் பற்பல நாட்டின் தன்மை, கல்வி, பண்பாடு, நாகரிகம், வாணிகம், பண்டங்களின் உற்பத்தி முதலியவற்றை நாம் அறியலாம்; அரசியலில் விருப்பமுள்ளவர்கள், அரசியல் நிலையை அறியலாம்; வாணிகத்தில் நோக்கமுடையவர், எவ்வெவ்விடங்களில் எப்படி வாணிகம் நடைபெறுகின்றது என்றறிய முடியும்; இனிய இசைகளைக் கேட்டு இன்பம் அடையலாம்; வரலாற்றில் விருப்பமுள்ளவர்கள், அவற்றைக் கேட்டு அறிவு பெறலாம்.

பொதுவிடங்களான கடற்கரைக்கு அருகிலுள்ள இடங்களிலும், பூஞ்சோலைகளிலும் வானொலியமைத்திருப்பதால் பொதுமக்கள், வானொலியைக் கேட்டு இன்புறுகின்றனர். பற்பல பள்ளிக்கூடங்களின் தலைவர்கள், மாணவர்கள் நல்லறிவு பெற வானொலியமைத்துள்ளார்கள். மாணவர்கள், தங்கள் பாடங்களைப் பற்றியும், நாட்டில் நடைபெறும் நிகழ்ச்சிகளைப் பற்றியும், அவ்வப்பொழுது வானொலியில் கேட்டு நன்கு தெரிந்துகொள்ளுகிறார்கள்.

வானொலி ஏற்பட்டவுடன் நம் இந்தியாவில் முதல் முதல் பம்பாயில் வானொலிநிலையம் ஏற்படுத்தப்பட்டது; அதன்பின் டெல்லி, கல்கத்தா, முதலிய பல இடங்களில் ஏற்படுத்தப்பட்டன. நம் தமிழ்நாட்டில் வானொலி நிலையங்கள் சென்னையிலும், திருச்சியிலும் அமைந்துள்ளன. மேற் குறிப்பிட்ட இடங்கள் தவிர, விஜயவாடா,

திருவாங்கூர், மைசூர் முதலிய இடங்களிலும் வானொலி நிலையங்கள், உள்ளன.

சென்னையில் எழும்பூரில் வானொலி நிலையம் ஒன்று உண்டு. மக்கள், அந்த வானொலி நிலையத்திலிருந்து ஒலி பரப்பப்படும் இசை, பேச்சு முதலியவற்றைக் கேட்டு மகிழ்வடைகின்றனர்.




வானொலி

அங்கு நாற்புறமும் மூடப்பட்ட அறையில் ஒலியை ஏற்று வெளியனுப்பும் கருவி அமைந்துள்ளது. பாடுவோர், அதன் முன்புறம் இருந்துகொண்டு பாடுவர். பேசுவோரும், அவ்வாறே இருந்து பேசுவர். அங்கு அவர் எழுப்பும் ஒலி, சென்னையிலும், பிறஊர்களிலும் சென்று ஒலிக்கும்.

சென்னை திருவல்லிக்கேணிக் கடற்கரையில் இந்த வானொலியின் கருவி ஒன்று, அமைக்கப்பட்டுள்ளது.

அங்கு மாலை வேளையில் திரளான மக்கள், சென்று அந்தக் கருவியின் மூலம் பாட்டுகளைக் கேட்டு இன்பம் அடைகின்றனர்; அத்துடன் அரசியல் செய்திகளையும், பிறசெய்திகளையும் கேட்டறிகின்றனர். ஆயிரக்கணக்கான மக்கள் வந்து தங்க அங்குப் பரந்த மணல்வெளி, உள்ளது. பகல் முழுதும் தம் வேலைகளைக் கருத்துடன் செய்த ஆடவரும், மகளிரும் மாலை நேரத்தில் இந்த வானொலியைக் கேட்டு இன்பம் அடைகின்றனர்; கடற்கரையை இவர்கள், அடைவதால் கடல்காற்றை ஏற்றுப் பிணியின்றி வாழ்கின்றனர். பெரியோர்களும், பள்ளி மாணவ மாணவிகளும், வானொலியின் பயனை அறிந்து நன்கு பயன்படுத்திக் கொள்வார்களாக.

## குறிப்புரை

அறிஞர்–அறிவுடையோர். செவி–காது. நிகழ்ச்சிகள்–செய்திகள். கைம்மாறு – பதிலுதவி. வாயில்–வழி. பண்பாடு–குணம். வரலாறு–சரித்திரம். பிணி–நோய்.

## வினாக்கள்

1. ஒலி பரப்புதல் என்றால் என்ன?
2. வானொலியை முதல்முதல் கண்டுபிடித்தவர் யார்?
3. அவர் பெற்ற பரிசு யாது?
4. வானொலியினால் நாம் அடையும் பலன்கள் எவை?
5. வானொலி நிலையம், இந்தியாவில் முதல்முதல் எங்கு ஏற்பட்டது?
6. சென்னையில் வானொலி நிலையம், எங்கு அமைக்கப்பட்டுள்ளது?

## இலக்கணம்

சிறுவர்கள், நீர்நிலையில் கல்லை எடுத்துப்போடுவர். 'சிறுவர்கள்' என்னும் சொல், மக்களினத்தில் பிறந்த இளம் பருவமுடையவரைக் குறிப்பிடுகிறது. மக்களையும், தேவரையும் குறிக்கும் சொற்கள் உயர்திணைச் சொற்களாம். விலங்கு, பறவை, மற்ற உயிருள்ளவை, உயிரில்லாதவை இவற்றைக் குறிக்கும் சொற்கள் அஃறிணைச் சொற்களாம்.

'வானொலி, மாணவன் மாணவி இருவர்க்கும் கல்வியை ஊட்டுகிறது. மாணவர் வானொலியைக் கேட்பது நலம்.'

இவ்வாக்கியங்களில், மாணவன்—ஆண்பால்
மாணவி —பெண்பால்
மாணவர் —பலர்பால்

இம்மூன்று பால்களும் உயர்திணையைச் சேர்ந்தவை.

'முதலில் எழுப்பும் ஒலிஅலை பரவிப் பல ஒலிஅலைகளாக மாறும்.'

இந்த வாக்கியத்தில், ஒலிஅலை—ஒன்றன்பால்
ஒலிஅலைகள்—பலவின்பால்

இந்த இரண்டு பால்களும் அஃறிணையைச் சேர்ந்தவை.

## பயிற்சி

இந்தப் பாடத்தில் உள்ள சொற்களிலிருந்து ஐந்து பால்களையும் எடுத்து எழுதிக்காட்டுக.

---

# 6. கம்பர்

தமிழ் நாட்டில் உள்ள மக்கள், கம்பரைப் பற்றி நன்கு அறிந்திருப்பர். வான்மீகி, வடமொழியில் இயற்றிய இராமாயணத்தைத் தமிழ்ச் செய்யுட்களால் பாடியவர் கம்பரே ஆவர். கம்பர் பாடிய இராமாயணச் செய்யுட்கள், நிரம்பச் சுவையுடையவை; ஒவ்வொரு செய்யுளும் இனிமையாயிருக்கும்; அவர் அவர் அறிவுக்குத் தக்கபடி பொருள் விளங்கும்; இவர் பாடிய இராமாயணம், தமிழ் மொழிக்குச் சிறந்த மதிப்பைக் கொடுத்துள்ளது. வட மொழியில் காளிதாசனுக்கும், ஆங்கிலத்தில் ஷேக்ஸ்பியருக்குமுள்ள மதிப்புத் தமிழில் கம்பருக்கும் உண்டு.

இந்தத் தமிழ்ப் பாவலர், சோழ வளநாட்டில் திருவழுந்தூரில் உவச்சர் குலத்தில் பிறந்தவர். இவர் பிறந்து சிலநாள் கழிந்தவுடன், இவர் பெற்றோர், விண்ணுலக வாழ்வை அடைந்தனர். அதனால், இவர் உறவினர், இக்குழந்தையை எடுத்து வளர்த்தனர். இவர், மழலைப் பேச்சைப் பேசத்தொடங்கும்பொழுதே அறிஞரும் கொண்டாடத்தக்க மொழிகளைப் பேசினார். இவர், இளமைப் பருவத்தில் குல முறைப்படி உறவினருடன் காளி கோவிலுக்குச் செல்வார்; அங்குப் பூசை முடியும் வரையில் காளியை வணங்கிக்கொண்டு நிற்பார்.

இவ்வாறு நாடோறும் காளியை வணங்கியதன் பலனாகப் பத்து வயதுக்குள் தானே தமிழ்ப் பாடலைப் பாடும் திறமை இவருக்கு ஏற்பட்டது. இவர், அப்பொழுது

பாடிய பாடலை அறிஞர் பலர் கேட்டு இவரைப் புகழ்ந்தனர்; சிலர், இவரை அணுகி, "வெண்ணெய் நல்லூர்ச் சடையப்பவள்ளலை அடைந்து அவர் ஆதரவைப் பெறுவாய்" என்றனர்.

அவர்கள் மொழிப்படி கம்பர், திருவெண்ணெய் நல்லூரை அடைந்தனர்; அவ்வூரின் வளங்களை எல்லாம் கண்டனர்; சடையப்ப வள்ளலிடம் சென்று தன்னை ஆதரிக்கும்படி வேண்டினர். அவ்வள்ளல், இவருடைய நுண்ணறிவைக்கண்டு இவருக்குச் சிறந்த ஆசிரியரை ஏற்பாடு செய்து கல்வி கற்கும்படிச் செய்தனன். இவர், இலக்கியங்களையும், இலக்கணங்களையும் படிப்படியாய்க் கற்று வந்தனர்; வட மொழியில் சிறந்து விளங்கும் வான்மீகி இராமாயணத்தைக் கேட்டவுடன், அதைப் போல் தமிழில் இராமாயணம் பாட எண்ணினர்.

இவ்வாறு கம்பர், இராமாயணம் பாட எண்ணிய பின், நாமகள்மீது முப்பது பாடல்களைப் பாடினர். இந்த முப்பது பாடல்கொண்ட நூலுக்குச் சரஸ்வதி அந்தாதி என்று பெயர். அப்பாடல் ஒவ்வொன்றும் சிறந்த மணி போன்று விளங்குகின்றது.

சடையப்ப வள்ளலும், அவர் குலத்தாரும் கைக்கொண்டிருந்த ஏர்த்தொழிலைச் சிறப்பித்துக் கம்பர், "ஏரெழுபது" என்னும் நூலைப் பாடினர். அதன்பின், இவர் உள்ளத்தில் முன்பே குடிகொண்டிருந்த இராமாயணம் பாடும் விருப்பம், பெரிதாக ஏற்பட்டது; ஒவ்வொரு நாளும் அதைப்பற்றிச் சிந்தித்து வந்தனர். சோழன், கம்பரைச் சந்திக்கும்போதெல்லாம் அவரை இராமாயணம் பாடித்தரவேண்டுமென்று வேண்டி

வந்தான். சடையப்பவள்ளலும், பலமுறை இதுபற்றிக் கம்பரைத் தூண்டிக்கொண்டே யிருந்தனன்.

கம்பரும், தாம் பிறந்த நாட்டிற்கும், தமக்கும் புகழ் உண்டாகவும், தமிழ் மொழி தழைத்து வளரவும் இராமாயணம் பாடத்தொடங்கினர்; அப்பொழுது அந்த இராமாயணத்திற்கு இராமாவதாரம் என்று பெயரிட்டிருந்தனர். அவர், இரவு பகலாக உழைப்பெடுத்து வடமொழி இராமாயணத்தை ஆராய்ந்து நாள்தோறும் தமிழில் பாடி வந்தனர்; பலநாள் எடுத்த முயற்சியின் பலனாக இராமாயணத்தைப் பாடி முடித்தனர்; இந்த அரிய நூலைத் திருஅரங்கத் திருநகரில் அரங்கேற்றுதற்குச் சென்றனர்.

கம்பர், அந்நகரிலுள்ள கல்வியிற் சிறந்த வைணவர்களிடம் தம் கருத்தைக் கூறினர். அவர்கள், இவர் கருத்துக்கு இசையும் முன், சடகோபன் என்னும் நம்மாழ்வாரைப்பற்றிப் பாடும்படிக் கேட்டுக்கொண்டனர். அப்பொழுது கம்பர், "சடகோபரந்தாதி" என்னும் நூலைப் பாடித் தந்தனர். பின்பு, கம்பர், தாம் பாடிய இராமாயணத்தை அரங்கேற்றினர். சில அறிஞர்கள், இடை இடையே தடைக்கேள்விகள் கேட்டனர். இவர், அவ்வினாக்களுக்கெல்லாம் ஏற்ற விடைகள் அளித்தனர். இராமாயண அரங்கேற்றம், சிறப்பாக நடந்தேறியது. அந்த வைணவர்கள் பலரும் சிறந்த கல்வியறிவு படைத்தவர்கள்; அவர்கள் ஒன்றுகூடிக் கம்பருக்குக் கவிச் சக்கரவர்த்தி என்ற பட்டப் பெயர் சூட்டினர்; உடனே அரங்கநாதப் பெருமான் கழுத்திலிருந்த பெரிய பூமாலையைக் கொண்டுவந்து கம்பர் கழுத்தில் சாத்தினர். அப்பொழுது அனைவரும், கம்பரைக் கண்டு மகிழ்ந்தனர்.

அந்த வைணவருள் ஒரு பெரியார், எழுந்து தெய்வத் தன்மை நிரம்பிய இந்த இராமாயணத்தில் நூற்றுக் கொருபாடல் சடையப்ப வள்ளலைப் பாடியிருப்பது, மனிதனைப் பாடி யிருப்பதாம் என்றார். அப்பொழுது கம்பர், தாம் சடையப்பருக்கு நன்றி செலுத்த அவ்வாறு பாடியதாகக் கூறினார். இம் மொழியைக்கேட்ட அனைவரும் அப்பாடல்களை ஆயிரத்திற்கொன்றாக அமைத்துக்கொள்ளலாம் என்றனர். அப்பொழுது கம்பர், சடையப்ப வள்ளலின் பெருமையறியாத யான் அவரை நூற்றுக்கொருவராக எண்ணினேன் ; இனி நீங்கள் மொழிந்தபடி அவரை இந்த நூலில் ஆயிரத் திற்கு ஒருவராக ஆக்குவேன் என்று மொழிந்தார். கம்பர் திறமைப்பட மொழிந்த இச்சொல், எல்லோர்க் கும் பெருமகிழ்ச்சியைத் தந்தது.

பின்பு கம்பர், சிலநாள் அங்குத் தங்கி யிருந்தார். அதன்பின் அவர், திருவெண்ணெய்நல்லூருக்குச் சென் றார். அங்குக் கம்பராமாயணச் செய்யுளை அவர், சடையப்பவள்ளலுக்கு அவ்வப்போது எடுத்துப்பாடிக் காட்டினார் ; சோழ மன்னன் வேண்டுகோளுக்கு இணங்கி அவன் அவையில் கம்பர் மற்றொரு முறை இராமாயணத்தை அரங்கேற்றினார். அவ்வேந்தன், அவருக்குப் பல்லக்கு, சின்னம், காளம், பணியாட்கள் முதலிய பல விருதுகள் தந்தான்.

இந்த விருதுகளைப் பெற்று முடிமன்னர் வணங்கும் கவிச்சக்கரவர்த்தியாய் உலகம் முழுதும் கொண்டாடும் படி கம்பர், வாழ்ந்திருந்தார். நாம், இன்று அவர் பாடல்களைப் படித்து அவற்றில் அமைந்துள்ள உயர்ந்த கருத்துக்களைக்கண்டு மகிழ்கின்றோம். கம்பராமாயணம்,

தமிழ்த்தாய்க்கு ஒரு சிறந்த மகுடமாயிருந்து விளங்குகின்றது. தமிழ் மக்களாகப் பிறந்த நாம் ஒவ்வொருவரும், இந்த இராமாயணத்தைப் படித்து இன்பம் அடைவோமாக.

## குறிப்புரை

இயற்றிய – பாடியருளிய. சுவை – உருசி. பாவலர் – பாட்டுப் பாடுவதில் வல்லவர். அணுகி – நெருங்கி. சிந்தித்து – நினைத்து. தழைத்து – செழித்து. இசையும்முன் – ஒப்புக்கொள்ளுமுன். அந்தாதி – ஒரு பாடலின் கடைசிச் சொல் அல்லது எழுத்து அதற்கடுத்த பாடலின் தொடக்கத்தில் வரப் பாடும் பிரபந்தம். சாத்தினர் – அணிந்தனர். இணங்கி–ஒப்புக்கொண்டு. அவை–சபை. சின்னம்–திருச்சின்னம் என்னும் ஊது கருவி. காளம் – இதுவும் ஒருவகை ஊது கருவி. மகுடம் – முடியிலணியும் ஒருவகை அணி.

## வினாக்கள்

1. கம்பர் பிறந்த நாடு, ஊர், குலம் இவற்றை வரைக.
2. சடையப்ப வள்ளல், கம்பருக்குச் செய்த உதவிகள் யாவை?.
3. கம்பர் இயற்றிய நூல்கள், எவை?
4. கம்பராமாயணம், முதலில் எவ்விடத்தில் அரங்கேற்றப்பட்டது?
5. கம்பருக்குச் சோழன் கொடுத்த விருதுகள், எவை?
6. கவிச்சக்கரவர்த்தி என்ற பட்டப் பெயர், கம்பருக்கு எப்பொழுது யாரால் கொடுக்கப்பட்டது?

## இலக்கணம்

1. கம்பர், திருவழுந்தூரில் பிறந்தார்.
2. கம்பர் பாடல்களை நாம், கேட்டு மகிழ்கிறோம்.

3. நாம், அவர் செய்யுளைப் படித்து இன்பம் அடைவோம்.

முதல் வாக்கியத்தில் 'பிறந்தார்' என்ற வினை, சென்ற காலத்தைக் குறிப்பதால் இறந்தகாலவினை எனப்படும். இரண்டாம் வாக்கியத்தில் 'மகிழ்கிறோம்' என்ற வினை நிகழ்காலத்தைக் குறிப்பதால் நிகழ்காலவினை எனப்படும். மூன்றாவது வாக்கியத்தில் 'அடைவோம்' என்றவினை, எதிர் காலத்தைக் குறிப்பதால் எதிர்காலவினை எனப்படும்.

இவ்விதம் காலங்கள், மூன்று வகையாகப் பிரிக்கப்பட்டு இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் என்று கூறப்படும்.

## பயிற்சி

இப்பாடத்திலுள்ள வாக்கியங்களிலிருந்து மூன்று காலவினைகளையும் தனித்தனி எடுத்து எழுதிக்காட்டுக.

——

## 7. இராணி துர்க்காவதி

நமது இந்தியாவில் வாழும் மக்கள் அனைவரும் வீரமுடையவராவர்: இவருள் ஆண்பாலார் மட்டும் வீரமுடையவர் என்று கருதுவதற்கில்லை. பெண்பாலார்களும், ஆண்பாலாரைவிடச் சிறந்த வீரமுடன் இருந்திருக்கிறார்கள்; இப்பொழுதும் இருக்கிறார்கள். நம் நாட்டில் வீரமுடன் வாழ்ந்த ஒரு பெண்மணியின் சரித்திரத்தை இப்பாடத்தில் நாம் தெரிந்துகொள்ளலாம்.

இந்தியாவை யாண்ட முகம்மதிய அரசருள் அக்பர் என்பவர் ஒருவர். அவர், நம் இந்தியாவின் வடபாகத்தை யாண்டுவந்தார். அவர், மக்களைத் துன்பப்படுத்தாதவர்; எல்லாச் சாதியாரையும் சமமாகப் பாவித்து வந்தவர். அவர் அரசு செய்துவந்தபொழுது, இந்தியாவின் நடுவில் "குருமண்டலம்" என்னும் நாடு ஒன்று இருந்தது. அந்த நாட்டை ஓர் அரசன், ஆண்டுவந்தான். அவன் மனைவியின் பெயர், 'துர்க்காவதி.' அவள் இராஜபுத்திர மகள்; வீரத்தில் ஒப்பற்றவள்; மிக்க துணிவு படைத்தவள்; அவள் உள்ளத்தில் நாட்டுப்பற்று, குடிகொண்டிருந்தது; உயிர்களிடத்தன்பும், அருளுமுடையவள்; பொறுமைக்கு இருப்பிடமாகவுள்ளவள். அவள், இளமையிலிருந்தே போர்க் கருவிகளைக் கையாளும் திறமையுடையவள்; ஆடவர்களைப் போரில் நடுங்கச் செய்யும் வலிமையுடனிருந்தாள்.

இந்த வீரப் பெண்மணிக்கு ஓர் ஆண் மகன், பிறந்தான். அம்மகனுக்கு அவள், 'வீரநாராயணன்' என்று

பெயரிட்டு வளர்த்து வந்தாள். வீரநாராயணன் பிறந்த சிறிது காலத்திற்குள் அவன் தந்தை இறந்தான். அரசி துர்க்காவதி, கணவன் இறந்த துயரத்தைத் தாங்கமுடியாமல் வருத்தப்பட்டாள் ; தன் அரிய மகன் பொருட்டு உயிரோடு இருந்துவந்தாள். அத்துடன் அரசாங்க வேலைகளை நன்கு கவனிக்கவேண்டிய பொறுப்பு, அரசிக்கு ஏற்பட்டுவிட்டது.

துர்க்காவதி, சிறந்த அறிவு படைத்தவள் ; நாட்டு மக்கள் நன்னிலையடையப் பாடுபடுபவள். அவள் குடிகளுக்குப் பற்பல நன்மைகளைச் செய்தாள் ; ஏழை மக்களுக்கு வீடுகள் பல கட்டிக் கொடுத்தாள் ; தான் ஆளும் நாடெங்கும் குளங்களை வெட்டிக் கொடுத்தாள் ; பற்பல கிணறுகளைத் தோண்டச் செய்தாள் ; கோவில் பல கட்டும்படி ஏற்பாடு செய்தாள் ; சத்திரங்கள் பல கட்டினுள் ; குடிகள் மதவெறி கொண்டு போரிடாமல் அவர்களுக்குள் ஒற்றுமையை உண்டாக்கினுள். இவ்விதமான பற்பல சீர்திருத்தங்களால் அவள் நாடு செழிப்புற்றது. மக்கள், பசியும் நோயுமின்றி வாழ்ந்தனர். நாடெங்கும் பலவித தானியங்கள், விளைந்தன. வீரர்கள் பலர் தோன்றினர். அதனுல், படை பெருகிற்று.

இந்த இராணியின் புகழ், அக்பருக்கு எட்டியது. அக்பர், நல்ல உள்ளம் படைத்தவர் ; ஆதலால், இராணியின் அரசியலைக் கேட்டு மிகவும் மகிழ்ச்சியடைந்தார். அவரது சேனைத்தலைவன் அசப்கான் என்பவன் ஒருவன் இருந்தான். அவன், மிக்க செழிப்படைந்துள்ள குருமண்டலத்தைக் கைப்பற்றிக்கொள்ள எண்ணினுன். அதனுல், அவன், ஆயிரக்கணக்கான வீரர்களோடு சென்று குருமண்டலத்தை எதிர்த்தான்.

அசப்கான் தன் படையோடு போரிடவந்துள்ளான் என்று துர்க்காவதி, அறிந்தாள். தன் சேனை சிறிதாக இருப்பினும், தான் கணவனை இழந்திருப்பினும் அரசி சிறிதும் தளர்ச்சியடையவில்லை. பெரிதும் ஊக்கமுடன் போர் செய்து நாட்டைக் காப்பாற்ற வேண்டும் என்ற வீரம், அரசிக்கு உண்டாயிற்று.

உடனே துர்க்காவதி, தன் வீரர்களை ஒன்றுகூட்டி அவர்களுக்கு ஊக்கமூட்டினுள்; படைகளைத் திரட்டிக் கொண்டு புறப்பட்டாள்; தானே தன் சேனைக்குத் தலைமை பூண்டு போரிடத் துணிந்தாள்.

இராணியின் சேனையிலுள்ள வீரர்கள், நாட்டுப் பற்று உடையவர்கள்; தங்கள் உயிரைக் கொடுத்தாவது நாட்டைக் காப்பாற்ற முன்வந்தனர். ஒவ்வொருவரும் கலங்கா நெஞ்சம் கொண்டு கடுமையாகப் போர் புரிந்தார்கள். அரசியாரும், தம் வீரம் முழுதும் காட்டிக் கடும்போர் செய்தனர். இப் பெண்பாலின் சிறந்த வீரத்தைக் கண்ட வீரர்கள், பின்னும் பல மடங்கு உறுதி கொண்டு போரிட்டனர். முகம்மதியர் சேனை, முன்னிற்க முடியாமல் ஓட்டம் பிடித்தது. இந்தப் பெண்மணியின் வீரத்தைக் கண்டு பகைவீரர்கள், நடுநடுங்கினர்; நின்ற இடத்தில் நிற்காமல் முதுகு காட்டித் தோற்றோடினர். இராணி துர்க்காவதியே, வெற்றிபெற்றுள்.

அசப்கான், அவமானமடைந்து தோற்றுத்திரும்பிச் சென்றுன்; இவ்வளவு காலம் வீரமுடன் வாழ்ந்து இன்று ஒரு பெண்ணுல் தோல்வி அடைந்தோமே என்று உள்ளம் உடைந்து வருந்திஞன். சிலநாள் சென்றவுடன் அசப்கான், இரண்டாம் முறை படை

யெடுத்து வந்தான். அந்தமுறையும் தன்படைகளோடு இராணியே, போர்க்களம் வந்து போரிட்டனர். இராணி யாரே விடாப்பிடியாய்த் துணிவுடன் போர்செய்து வெற்றி பெற்ருர்.

இந்த இரண்டாம் போரில் தோல்வியடைந்த அசப் கான், ஒரு தந்திரம் செய்து வெல்லக் கருதினுன். குரு மண்டலப் போர் வீரரை வலிமையால் வெல்ல முடியா மல் அவர்களுக்குப் பணத்தை வாரிக்கொடுத்து வெல்ல முயன்ருன். "பணமென்ருல் பிணமும் வாய் திறக்கு மல்லவா ?" பணந்தானே கெட்டவனை நல்லவனுக்கு கிறது ; நல்லவனைக் கெட்டவனுக்குகின்றது. பண ஆசை பிடித்த படைவீரர்கள், பணத்தைக் கைக் கொண்டு நாட்டைக் கைவிடத் துணிந்தனர்.

அசப்கான், பணத்தை வாரிச்செலவிட்டு இராணி யின் வீரர்களைத் தன் வசப்படுத்திக் கொண்டான்; பின்பு, மூன்ரும் முறை போர் செய்ய வெட்கமில்லாமல் வந் தான். போர் நடக்கும்பொழுது பணம் வாங்கிக் கொண்ட வீரர்கள், இராணிக்கு எதிர்ப்புறமாகப் போரிட் டார்கள். அப்பொழுது வீர இராணியின் மனம், எப்படி இருந்திருக்கும் ! அந்த வீரநங்கை, சிறிதும் மனம் கலங்க வில்லை ; வீரத்தோடு தனியே கடும்போர் புரிந்தாள். அந்த வீரத்தாயின் அருமை மகன் வீரநாராயணன், போரில் மாண்டான். அப்பொழுது துர்க்கையே என்று கூறத் தகுந்த துர்க்காவதி "என் பிள்ளை இறந்தாலும், நாட்டைப் பிறன் கையில் விடேன் ; என் மகனையும், என் உயிரையும்விட என் நாடே சிறந்தது ; என் உயிர் நீங்கும் வரையில் போர் செய்தே தீருவேன்" என்று சிங்கம் போல் போர்க்களத்தில் கர்ச்சித்தாள்.

இதன் பின், இன்னும் கடுமையாக அரசியார், போர் செய்தார். அவள் கண் ஒன்றில் பகைவர் விட்ட அம்பு பாய்ந்தது. அதைச் சிறிதும் பொருட்படுத்தாமல் அவள், மிக்க வீரத்தோடு போர் செய்து போர்க்களத்திலேயே ஆவியை விட்டாள்! ஆ! தேசத்தின் பொருட்டு



இராணி துர்க்காவதி

ஆவியைத் துறந்த துர்க்காவதியே, நம் நாட்டுப் பெண் மணிகளுள் சிறந்த வீரப்பெண்மணி அல்லவா ? இப்படி வீரம் நிறைந்த தாய்மார்கள் பலர், நம் இந்தியாவில் வாழ்ந்திருந்தார்கள் என்பது, தெரிய வருகின்றது.

## குறிப்புரை

இராஜபுத்திரர்—ஒருவகை அரச இனத்தார். கருவிகள்—ஆயுதங்கள். செழிப்பு—வளம். உள்ளம்—மனம். திரட்டி—

ஒன்று கூட்டி. அவமானம்–மானத்தின் இழிவு. தந்திரம்–உபாயம். புரிந்தாள்–செய்தாள். துர்க்கை–வெற்றி தரும் பெண் தெய்வம். ஆவி–உயிர்.

## வினாக்கள்

1. இராணி துர்க்காவதியின் குணங்கள், எவை?
2. இந்த இராணியார், குடிகளுக்குச் செய்த நன்மைகள், எவை?
3. அசப்கான், தான் வெற்றியடையச் செய்த தந்திரம் யாது?
4. "பணம் என்றால் பிணமும் வாய் திறக்கும்" இப்பழமொழி வந்துள்ள இடம் குறிப்பிடுக.
5. 'இராணி துர்க்காவதி சிறந்த வீரமுடையவர்' என்பதை விளக்கி ஆறு வரிகளில் எழுதுக.

## இலக்கணம்

(1) குருமண்டலத்தை ஓர் அரசன், ஆண்டான்.

(2) துர்க்காவதி, பல அறங்களைச் செய்து புகழ் படைத்தாள்.

'அரசன் ஆண்டான்' என்பதில் ஆண்டான் என்னும் வினை, பொருள் முடிந்திருப்பதால் முற்றுவினை அல்லது வினைமுற்று எனப்படும். அறங்களைச் செய்து என்னும் வினை, பொருள் முடியாமல் 'படைத்தாள்' என்பதில் போய் முடிவதால் 'எச்சம்' எனப்படும். வினைச்சொற்கள், 'முற்று' 'எச்சம்' என்று இருவகைப்படும்.

## பயிற்சி

(1) இப்பாடத்திலிருந்து சில வினைமுற்றுக்களையும், வினை எச்சங்களையும் தனித்தனி எடுத்து எழுதிக் காட்டுக.

(2) 'கந்தன், நடந்து சென்று தன் ஊரை அடைந்தான்' இதில்உள்ள வினையெச்சம், வினைமுற்றுக்களைக் குறிப்பிடுக.

———

## 8. கடிதங்கள்

பள்ளிக்கூடங்களில் கல்வி பயிலும் மாணவர்கள், கடிதம் எழுதக் கற்றுக்கொள்ளவேண்டும். கடிதம் எழுதுவதில் இந்த இடத்தில் இவைகளை எழுதுதல் வேண்டும் என்று முதலில் அறிந்துகொண்டே எழுதத் தொடங்குதல் நலம். நாம் வெளியூரில் அல்லது உள்ளூரில் உள்ள உறவினர்க்காவது, நண்பர்களுக்காவது கடிதம் எழுதுவோம். பெரும்பாலும் நாம் இருவகைக் கடிதம் எழுதுகிறோம். ஒன்று உறையில் அனுப்பும் கடிதம்; மற்றொன்று வெளிப்பட வரையும் கடிதம். கடிதத்தில் எழுத்துக்கள், தெளிவாக இருக்கவேண்டும்; அவற்றின் வடிவங்கள், சிதையும்படி எழுதுதல் கூடாது. அடியிற்கண்ட முறைகளைக் கையாண்டு கடிதங்கள் எழுதுதல்வேண்டும்.

1. கடிதம் எழுதுவோர் முகவரி, தேதி.

2. தொடக்கத்தில் எழுதப்படுவோர்க்கு ஏற்றபடி வணக்கம் அல்லது ஆசி முதலியன.

3. நலம் வினவுதல்.

4. இன்றியமையாத செய்திகள்.

5. வேறு செய்திகளிருப்பின் அவை.

6. முடிவு, கையொப்பம் இடுதல்.

7. முகவரி—கடிதத்தின் மேற்புறத்தில் எழுதுதல்.

இங்குக் குறிப்பிட்டுள்ள ஏழு விதிகளையும் மேற்கொண்டு கடிதம் எழுதுதல் வேண்டும்.

(1) கடிதம் எழுதுவோர், தம் வீட்டின் எண், தெரு, பேட்டை, ஊர் இவற்றின் பெயர், எழுதும் தேதி இவற்றைக் கடிதத்தின் மேற்புறத்தில் வலதுகைப்பக்கம் எழுதுதல்வேண்டும்.

(2) கடிதத் தொடக்கத்தில் எழுதப்படுவோர் நிலைக்கு ஏற்றபடி வணக்கமோ, ஆசியோ கடிதத்தின் இடப்புறத்தில் எழுதுதல் வேண்டும்.

(3) கடிதத்தில் எழுதவேண்டிய செய்திகளை இடப் புறம் சிறிது இடம்விட்டுத் தொடங்கி, வகைப்படுத்தி எழுதுதல் வேண்டும்.

(4) வகைப்படுத்திய ஒவ்வொன்றையும், ஒவ்வொரு பத்தியில் அமைத்து வேறொன்றை அதனுள் சேர்க்கா மல் எழுதுதல்வேண்டும்.

(5) கடிதத்தின் முடிவில் தக்க மதிப்புடைய சொல்லை எழுதிக் கையெழுத்தும், அதன்கீழ்த் தேதியும் இடுதல் வேண்டும்.

(6) முகவரியில் கடிதம் போய்ச் சேரவேண்டியவர் பெயர், வீட்டின் எண் அல்லது அவர் அலுவலகத்தின் பெயர், தெரு, ஊர், தபால் நிலையம், அருகிலுள்ள இருப் புப்பாதை நிலையம், மாவட்டம் இவற்றை முறையே எழுதி ஒவ்வொன்றிற்கும், காற் புள்ளியிட்டு, முடிவில் முற்றுப்புள்ளி வைத்து முடித்தல்வேண்டும்.

(7) உறையிலிட்டு அனுப்பப்படும் கடிதமாயின் உறையின்மேல் இடதுகை ஓரத்தில் கீழ்ப்புறமாக அனுப்புவோர் முகவரியை எழுதுவதுண்டு.

கடிதங்கள் பலவகைப்படும் : உறவினர்க்கு எழுதும் கடிதம், நண்பர்க்கு எழுதும் கடிதம், வாணிகக் கடிதம், விண்ணப்பக் கடிதம் எனப் பலவகைக் கடிதங்கள் உண்டு.

## 1. உறவினர்க்கு எழுதும் கடிதம்

பச்சையப்பன் உயர்நிலைப்பள்ளி,
சென்னை.
7—9—'52

அன்புள்ள தந்தை அவர்களுக்கு,

தங்கள் மகன், க. வடிவேலன் பல வணக்கம் செய்து எழுதிக்கொண்ட கடிதம்.

இவ்விடம் யான், சென்னையில் நலமாக இருக்கின்றேன். அங்கு என் தாய், தங்கை, தம்பி முதலியோர், நலமாக இருக்கின்றனரா ?

எங்கள் பச்சையப்பன் உயர்நிலைப் பள்ளியில் பாடங்கள் யாவும், நல்ல முறையில் கற்பிக்கப்படுகின்றன. நான், நாள்தோறும் ஒழுங்காகப் படித்து வருகின்றேன் ; உடம்பு நலத்தையும், நன்றாய்க் கவனித்து வருகின்றேன். இவ்வாண்டு தொடங்கி இதுவரையில் நடந்த பாடங்கள் எனக்கு ஒன்றும் அவ்வளவு கடினமாகத் தோன்றவில்லை. இம்மாதம் 18ம் தேதி தொடங்கி நவராத்திரி விடுமுறை 15 நாள் விடப்போவதாக யான், அறிந்துள்ளேன். நான், 17-9-'52 தேதி இரவே புறப்பட்டு அங்கு வந்து சேருவேன்.

இந்தக் கடிதம் தங்களிடம் சேர்ந்தவுடன், தங்கள் நலத்தைப் பதில் கடிதத்தில் எழுதி அனுப்பும்படி யான், வேண்டுகின்றேன்.

இப்படிக்கு,
தங்களன்புள்ள மகன்,
க. வடிவேலன்.
3-ம் படிவம், ஆ, பிரிவு,
பச்சையப்பன் உயர்நிலைப்பள்ளி.

முகவரி :

உயர்திருவாளர்,
கதிர்வேல் முதலியார்,
24, செட்டித் தெரு,
காஞ்சிபுரம்,
செங்கல்பட்டு மாவட்டம்.

## 2. நண்பர்க்கு எழுதும் கடிதம்

மா. சோமசுந்தரன்,
முதல்படிவம்,
மதுரைக் கல்லூரி உயர்நிலைப்பள்ளி,
மதுரை.
10—9—'52

என் உயிர் நண்பன் சி. நடராசனுக்கு உன் நண்பன், மா. சோமசுந்தரன், அன்புடன் எழுதிய கடிதம்.

வணக்கப்பல.

அரிய நண்ப! நான், இங்கு நலமுடனிருக்கின்றேன். நீயும், உன் தந்தையும், தாயும், மற்றுமுள்ள உன் சுற்றத்தாரும் நலமுடனிருக்கிறீர்களா? ஒரு கடிதத்தில் உன்னுடைய நலத்தைப்பற்றி எழுதியனுப்புக. நீ, வகுப்பில் பாடங்களைச் சரிவரப் படித்துவருகின்றாயா? நீ படித்துவரும் பள்ளியில் ஆசிரியர்கள், நன்றாகப் பாடங்களை நடத்திவருகின்றார்களா? எங்கள் உயர்நிலைப்பள்ளியின் படிப்பு, சிறந்த முறையில் நடைபெற்றுவருகின்றது.

மக்கள் வசிப்பதற்கு எங்கள் மதுரைமாநகரம், மிகவும் சிறந்த நகரமாகும். இந்த நகரத்தின் தெருக்கள், குப்பைகளும், சாக்கடைகளும் இன்றித் தூய்மையாக இருக்கும். வீதிகளில் நாள்தோறும் தவறாமல் இராக்காலங்களில் விளக்கு, எரியும். மக்களுக்கு ஏற்படும் பிணியைப் போக்க வைத்தியசாலைகள், உண்டு. மாணவர்கள் கல்வி கற்கப் பல உயர்நிலைப் பள்ளிகளும், கல்லூரிகளும் இருக்கின்றன.

அன்புள்ள நண்ப! உங்கள் ஊரில் மேற் குறிப்பிட்டவை எல்லாம் இருக்கின்றனவா? நான் கேட்டறிந்தபடி உங்கள் செஞ்சியில் கல்லூரி ஒன்றுகூட இல்லை என்று அறிந்துள்ளேன். மற்றபடி நான், இதில் எழுதி யிருப்பவை உங்கள் ஊரில் உண்டோ இல்லையோ அறியேன்.

நீ அடிக்கடி உன் நலத்தைப்பற்றி எனக்குக் கடிதம் எழுதிக்கொண்டிருக்க நான், வேண்டுகின்றேன்;

உன்னுடைய பதில் கடிதத்தை விரைவில் எதிர்பார்க்கின்றேன்.

இங்ஙனம்,
நண்பன்,
மா. சோமசுந்தரன்.

முகவரி :
சி. நடராசன்,
முதல்படிவம் 'ஆ' பிரிவு,
மாவட்ட உயர்நிலைப்பள்ளி,
செஞ்சி,
தென்னார்க்காடு மாவட்டம்.

இன்னும் மற்றக் கடிதங்களைப் பற்றி, நாம் மேல் வகுப்புக்களில் அறிந்துகொள்வோம்.

## குறிப்புரை

பயிலும்–கற்கும். சிதையும்படி–கெடும்படி. வினவுதல்–கேட்டல். தொடக்கம்–ஆரம்பம். முகவரி–விலாசம். ஆண்டு–வருடம். சுற்றத்தார்–உறவினர். பிணி–நோய். மாவட்டம்–ஜில்லா.

## வினாக்கள்

1. 'நாம், இருவகைக் கடிதம் எழுதுகிறோம், அவை எவை?

2. கடிதம் எழுதும்பொழுது கையாளவேண்டிய முறைகள், எவை?

3. முகவரி எவ்வாறு எழுதுதல்வேண்டும்?

4. கடிதங்களின் வகைகளில் மூன்று, வரைக.

5. நண்பருக்கு எழுதும் கடிதம் ஒன்று, எழுதுக.

6. உறவினருக்கு எழுதும் கடிதம் ஒன்று, எழுதிக் காட்டுக.

## இலக்கணம்

1. நான், ஒழுங்காகப் படித்து வருகின்றேன்.

2. இதுவரையில் நடந்த பாடங்கள், மூன்று.

இந்த இருவாக்கியங்களில் வந்துள்ள 'படித்து' 'நடந்த' என்ற இரு சொற்களும், எச்சங்களே ஆகும். இவற்றுள் 'படித்து' என்பது வருகின்றேன் என்ற வினைச் சொல்லைத் தழுவி நிற்பதால் வினையெச்சம் எனப்படும். 'நடந்த' என்பது பாடங்கள் என்ற பெயர்ச்சொல்லைத் தழுவி நிற்பதால் பெயரெச்சம் எனப்படும். ஆகவே, எச்சம், பெயரெச்சம் வினையெச்சம் என இரண்டு வகைப்படும்.

## பயிற்சி

இப் பாடத்தில் வந்துள்ள பெயரெச்சம், வினையெச்சங்களில் வகைக்கு இரண்டு எடுத்து எழுதுக.

---

## 9. விளையாட்டே வினையானது

அத்தினபுரியில் குருகுலத்தில் பரிட்சித்து, என்று ஓர் அரசனிருந்தான். இவன், பாண்டவர்களின் பேரன் ஆவான். பாண்டவர்கள் ஐவரில் இடையில் பிறந்தவன் அருச்சுனன். அவன் மகன், அபிமன்யு என்பவன். அபி மன்யுவின் புதல்வனே இப்பரிட்சித்து என்பவன். இந்தப் பரிட்சித்து என்பவனுடைய மகன், சனமேசயன் என்ப வன். சனமேசயன், பாரதக் கதையை முனிவர்களிடம் விருப்பத்தோடு கேட்டறிந்தவன்.

அத்தினபுரியை அரசாண்ட பரிட்சித்து, தன்சேனை களோடு ஒருநாள் வேட்டையாடக் காட்டிற்குச் சென்றான். அங்கு, அவன், சிங்கம், யானை, பன்றி, கரடி முதலிய விலங்குகளை வேட்டையாடி வந்தான். அப் பொழுது ஒரு புலி, அவன் கைக்கு அகப்படாமல் ஓடிற்று; அவன், அதனைத் தொடர்ந்து சென்றான். அந்தப்புலி, ஒரு மலைக்கு அப்புறம் ஓடி மறைந்தது. அரசன், அதனைப் பிடித்தே தீருவேன் என்று எண்ணிக் கொண்டு மேலும் அதனைப் பின்தொடர்ந்தான். அந்த மலையின் பக்கத்தில் அவன் தேடிவரும்போது சமீகர் என்னும் முனிவர், அங்குத் தவம் செய்துகொண் டிருந்தார்.

பரிட்சித்து, அம்முனிவரைக் கண்டவுடன் அவரை வணங்கித் துதித்தான்; அதன்பின், அவரை நோக்கி, 'இங்கொரு விலங்கு விரைந்தோடி வந்தது; அந்த விலங்கு எங்குச் சென்றது? தயவுசெய்து எனக்குக்

கூறுதல்வேண்டும்' என்று வேண்டினன். அம்முனிவர், மௌனவிரதம் கொண்டவராதலால் ஊமையைப்போல் மறுமொழி கொடாமலிருந்தார். அம்முனிவர், அரசன், எவ்வளவு பணிவோடு கேட்டும் பதில் உரைக்கவில்லை. உடனே வேந்தன், அருகில் இறந்துகிடந்த பாம்பை எடுத்து விளையாட்டாக அவர் கழுத்தில் இட்டான்.




விளையாட்டே வினையானது

பேசாதிருப்பவர், பாம்பைக் கழுத்திலிட்டவுடன் எப்படியும் பயந்து உதறிக் கொள்ளக்கூடும் என்பது அரசன் எண்ணம். அப்பொழுதும் அவர், அசையாமலிருந்தார். பாம்பைக் கழுத்திலிட்டுக் குறும்பு செய்த குருகுல வேந்தன், அப்படியே செத்த பாம்போடு அம்முனிவர் இருக்கத் தான் தன்னகர் நோக்கிச் சென்றான்.

சமீகர் என்னும் அம்முனிவர், நடந்தது ஒன்றும் தெரியாமல் தவத்திலிருந்தார். இந்த முனிவருடைய மகன், சிருங்கி என்னும் பெயருடையவன், வேறொரு வனத்தில் தவம் செய்து கொண்டிருந்தான். அவனுடைய நண்பன் கிருசன் என்பவன், இங்கு நிகழ்ந்த செய்தியை அவனிடம் போய்ச் சொன்னான். இதைக் கேட்ட சிருங்கி, தன் தந்தையைத் தாழ்வாக மதித்துச் செத்த பாம்பை அவர் கழுத்தில் இட்ட வேந்தன்மேல் கோபங்கொண்டான்; "உலகத்தை ஆளும் கல்வி அறிவு நிரம்பிய அரசன் இப்படியும் செய்யலாமா? இப்படிச் செய்தவனைத் தண்டிப்பவர், ஒருவருமில்லை அல்லவா? நல்லது, என் தந்தையை அவமதித்து இவ்வாறு செய்த அரசன், ஏழு நாளைக்குள் தக்ககன் என்னும் கொடிய பாம்பு கடித்து இறக்கக் கடவன்" என்று கூறிச் சாபமிட்டான்.

சிருங்கி, சாபமிட்டபின் தந்தையிடம் வந்தான்; அவர் கழுத்திலிருந்த பாம்பை எடுத்து அப்புறம் எறிந்தான்; பணிவோடு தன் தந்தையை வணங்கினான்; தான் அரசன் மேல் கோபங்கொண்டு சாபமிட்டதையும் தந்தையிடம் கூறினான்.

சமீக முனிவர், தன் மகன் அரசனுக்குச் சாபமிட்டதைக் கேட்டதும், நிரம்ப வருத்தப்பட்டார்; தன் மகனை நோக்கி, 'இவ்வுலக முழுதும் காக்கும் வேந்தனை நீ இவ்வாறு சபிக்கலாமா? அவன் நுண்ணறிவு மிக்க செங்கோலரசன் அல்லவா? வேட்டையாட வந்த வேந்தர், பித்தரைப்போல் மனம் போன வழியில் நடப்பர் என்பதை நீ அறியாயோ?' என்று வினவினார்.

தந்தை மொழியைக் கேட்டவுடன் சிருங்கி, தன் தந்தையை நோக்கி, "அரசன் தங்களை அவமானம் செய்தான் என்று மனம் பொறுக்காமல் இச்சாபமிட்டேன் என்ன செய்வேன்" என்றான். அப்பொழுது சமீகர், தன் அருகிலிருந்த அடியார்களில் சிலரை அழைத்து, "நீங்கள் மன்னனிடம் சென்று அவனுக்கு நேர்ந்த இச்சாபத்தைக் கூறுவீர்; இன்று தொடங்கி ஏழுநாள் வரையில் பாதுகாப்புள்ள இடத்தில் இருக்கும்படிச் சொல்லிவிட்டு வருவீர்" என்று அருளோடு கூறி அனுப்பி வைத்தார். அவர்கள், விரைந்து சென்று, மன்னனையடைந்து, சாபம் நேர்ந்திருப்பதை உரைத்தனர். அரசன், தனக்கு நேர்ந்துள்ள சாபத்திலிருந்து தப்பிப் பிழைக்கப் பலவாறு எண்ணினான்; மந்திரிகளோடு கலந்து ஆலோசித்தான்; அவர்கள் உரைத்த உரையின் படி கடல்நடுவில் பாம்பிற்குப் பயந்து ஒரு மாடம் கட்டி, அதில் ஆறுநாள் வரையில் உயிரோடிருந்தனன்.

ஏழாம் நாள் வந்தடைந்தது; தக்ககன் என்னும் கொடியநாகம், முனிவன் சாபப்படி மன்னனைத் தீண்ட வந்தது: வரும் வழியில் ஒரு மரத்தின்கீழ் வந்து தங்கிற்று.

அப்பொழுது காசிபன் என்றொரு அந்தணன், அம்மரத்தடியில் வந்து தங்கினான்; அவன், பாம்பு கடிக்கும் விஷத்தை உடனே நீக்கிவிடும் திறமையுடையவன்; அவன் அங்கு வந்து நின்றதைத் தக்ககன் பார்த்தது; தான் ஒரு கிழவேதியனாய் அவனருகில் சென்று அவனை நோக்கி, 'நீ அரசனிடம் வரும் காரணமென்ன?' என்று கேட்டது; அவ்வுரை கேட்ட காசிபன், "யான் விஷத்தை நீக்கும் வைத்தியன்; இன்று பரிட்சித்து

மன்னனை நாகம், தீண்டப் போகின்றது ; நான் அந்த விஷத்தைப் போக்கி மன்னவன் மகிழ்ந்து தரும்பொருளைப் பெறப்போகின்றேன் " என்றான்.

காசிபன் உரைத்த மொழிகளைக் கேட்ட தக்ககன், காசிபனை நோக்கி, 'நானே அந்தத் தக்ககன் என்னும் நாகம் ; இதோ உள்ள இந்த ஆலமரத்தை யான் தீண்டிச் சாம்பலாக்கி விடுகின்றேன் ; உனக்கு வல்லமையிருந்தால் முன் போல் மரமாக்கிவிடு பார்ப்போம் ;' என்று கூறி அம்மரத்தைத் தீண்டி விஷத்தீயால் சாம்பலாக்கிவிட்டது.

காசிபன், தான் கற்றிருந்த சஞ்சீவி மந்திரத்தால் அதனை முன் போல் மரமாகத் தழைத்திருக்கச் செய்தான். தக்ககன், அதைக்கண்டு நடுநடுங்கி, அந்த அந்தணனை வணங்கி, அரும்பொருள் கொடுத்து அனுப்பி விட்டது.

உடனே தக்ககன், அந்தணவடிவுடன் கையில் எலுமிச்சம்பழம் ஒன்றை எடுத்துக் கொண்டு பரிட்சித்திடம் சென்றது. பரிட்சித்து, இந்த வஞ்சகத்தை அறியாமல் தக்ககனை அந்தணன் என்று தன்னிடம் வரும்படி உத்தரவு கொடுத்தான். வேதியனாய் வந்த தக்ககன், மன்னன்முன் சென்று தன் கையில் வைத்திருந்த பழத்தை அரசனிடம் கொடுத்தான் ; அரசன், அதனை மோந்து பார்த்தான் ; அப்பொழுது எலுமிச்சம்பழம், பாம்பாகி அரசனைத் தீண்டிவிட்டு மறைந்து போயிற்று. மன்னவன், பாம்பு கடித்தவுடன் விஷம் தலைக்கேறி விண்ணுலகம் அடைந்தான்.

பரிட்சித்து, வேட்டையாடப் போனபொழுது விளையாட்டாகச் செய்த செய்கை, வினையாய் மூண்டு கடைசியில் மாண்டுபோகச் செய்தது. ஆதலால், விளையாட்டாகவும், பெரியோரிடம் நாம், பிழைகளைச் செய்யக் கூடாது என்று இக்கதையால் அறிகின்றோம்.

## குறிப்புரை

விலங்கு-மிருகம். மௌனம்-பேசாதிருத்தல். நிகழ்ந்த-நடந்த. அவமதித்து - தாழ்வாக எண்ணி. நுண்ணறிவு - கூர்மையான அறிவு. நாகம் - பாம்பு. திறமை - வல்லமை. வேதியன் - அந்தணன். விண்ணுலகம் - மேலுலகம்.

## வினாக்கள்

1. பரிட்சித்து என்னும் அரசன், எந்தக் குலத்தில் பிறந்தவன் ? அவன் தந்தை பெயர் என்ன ?

2. அவன், விளையாட்டாகச் செய்த செய்கை என்ன ?

3. பரிட்சித்துக்குச் சாபம் இட்டவர், யார் ? ஏன் சாபமிட்டார் ?

4. சமீகர் என்னும் முனிவருடைய நற்குணம் யாது ?

5. இந்தக் கதையால் நாம் அறியும் நீதி என்ன ?

## இலக்கணம்

பரிட்சித்து அத்தினபுரியில் ஆண்டான்.—இந்த வாக்கியத்தில் பரிட்சித்து என்பது எழுவாய் ; ஆண்டான் என்பது பயனிலை. எழுவாயை முதல் வேற்றுமை என்பர்.

அரசன் புலியைத் தொடர்ந்தான். இதில் புலியை 'ஐ' என்பது இரண்டாம் வேற்றுமை. சிருங்கி கோபத்தால் அரசனைச் சாபமிட்டான். கோபத்தால் 'ஆல்' என்பது மூன்றும் வேற்றுமை. சிருங்கி என்பவன், சமீகனுக்கு மகன் ஆவான். சமீகனுக்கு 'கு' என்பது நான்காம் வேற்றுமை. சிருங்கியின் நல்லவர் சமீகர். சிருங்கியின் 'இன்' என்பது ஐந்தாம் வேற்றுமை. முனிவனது சாபம் பலித்தது. முனிவனது 'அது' என்பது ஆறும் வேற்றுமை. காசிபன், மரத்தடியில் வந்து தங்கினான். மரத்தடியில் 'இல்' என்பது ஏழாம் வேற்றுமை. சமீகர், தன்மகனைநோக்கி, 'மகனே! இங்கு வா' என்றார். இவ்வாறு மகனே! என்று பெயரை முன்னிலைப்படுத்தி அழைப்பது எட்டாம் வேற்றுமை.

## பயிற்சி

இந்தப் பாடத்திலிருந்து வேற்றுமை உருபுகளை ஏற்று வரும் சொற்களை எடுத்து எழுதி அவை எந்த எந்த வேற்றுமை என்றும் குறிப்பிடுக.

——

# 10. இசைப்பயிற்சி

உலகில் இசையை யாவரும் விரும்புவர். சிறிய குழந்தை முதல் பெரிய கிழவர் வரை இசையை விரும்பிக் கேட்பர். மக்களேயன்றி விலங்குகளும், பறவைகளும் இசையைக்கேட்டு மகிழ்ச்சி யடையும். இறைவனும், இசையைக்கேட்டு உருகுகின்ருன் என்று அறிஞர், கூறுவர்.

உயிர்களுக்கு இசை, இன்பம் அளிப்பதால் இசையைப் பலரும், கற்கின்றனர். இசையைப்போல் ஓவியம், நாடகம் போன்ற கலைகள், மக்களைமட்டும் மகிழ்வடையச் செய்யும்: இசை கற்றவர், கல்லாதவர், விலங்குகள், பறவைகள் முதலிய எல்லா உயிர்களையும், மகிழ்ச்சி யடையச் செய்யும். உயர்திணை உயிர்களையேயன்றி, அஃறிணைப் பொருள்களையும் தன் வசப்படுத்தும் தன்மை, சிறப்பாக இசைக்கே உண்டு.

ஓர் அறிவுள்ள உயிரினங்களாகிய மரங்களும், செடிகொடிகளும் இசையில் விருப்பமுடையனவாகும். குளங்களில் உள்ள தாமரை, ஆம்பல் முதலிய மலர்களிலும், பிற மலர்களிலும் வண்டுகள் அமர்ந்து இசை பாடியபின் அம் மலர்கள், மலர்கின்றன. எந்த உயிர்களும், துயரம் ஏற்பட்டால் அழுகின்றன ; மகிழ்ச்சி ஏற்பட்டால் பாடத் தொடங்கிவிடுகின்றன ; மழை வரும் குறி ஏற்பட்டவுடன் வானம்பாடி என்னும் பறவைகள், மகிழ்ச்சி யடைந்து பாடத்தொடங்கிவிடுகின்றன.

மக்களைக் கண்டவுடன் சீறிக் கடிக்கும் கொடிய பாம்புகள் இனிய இசையைக் கேட்டவுடன் கோபம்

தணிந்து களிப்படைகின்றன. அத்துடன் அவைகள், இசைக்கு அடங்கிக் கீழ்ப்படிகின்றன. தெருவில் பிச்சை கேட்கவரும் பாம்பாட்டியை நீங்கள் பார்த்திருப்பீர்கள். அவன் ஒரு பெட்டியில் பாம்பைக் கொண்டுவருவான். அப்பாம்பு, அவனிடம் அகப்பட்ட நாள் முதல் உண வின்றி வாடி வருந்திக்கிடக்கும். ஆனால், அவன் 'மகுடி'யை எடுத்து ஊதத் தொடங்கியதும் அது அந்த இசையைக் கேட்டுப் படமெடுத்து மகிழ்ச்சியோடு ஆடத் தொடங்கிவிடும். தன் விருப்பப்படி மறைவான இடங் களில் போய்க்கொண்டிருக்கும் பாம்பு, ஓரிடத்தில் இனிய இசையைக் கேட்டவுடன், தனக்கு நேரும் ஆபத்தைப் பற்றியும் நினையாமல் அவ்விடத்திற்கு வந்து சேரும். இவ்வாறு தன்னுயிரையும் பொருட் படுத்தாமல் இசை கேட்குமிடத்திற்குப் பாம்பு, தானே வருமாயின், அதன் இசை விருப்பத்தை என்னென்று கூறுவது! இதனால், ஊர்ந்து செல்லும் உயிரினத்தைச் சேர்ந்த பாம்பிற்கு இசையில் விருப்பம் நிரம்ப உண்டு என்று நாம், அறிந் தோம்.

இனி, நாம் அசுணம் என்று சொல்லும் விலங்கினத் தின் தன்மையைக் கவனிப்போம். இதனை விலங்கென்று ஒரு சாராரும், பறவை என்று மற்றொரு சாராரும் கூறுவர். அது, விலங்காயினும், பறவையாயினும் இசையைக் கேட்டறிவதில் மக்களைவிடச் சிறந்தது. அசுணம், இனிய இசையைக் கேட்டு மகிழும் என்றும், இனிமை அல்லாத இசையைக்கேட்டால் மெய்ம்மறந்து விழுந்துவிடும் என்றும் தமிழ் நூல்கள், கூறுகின்றன. அதனைப் பிடிக்க எண்ணிய வேடர்கள், மறைவாக இருந்து யாழ் வாசிப்பார்கள். யாழின் இனிய இசையைக்

கேட்டு அது அருகில்வரும். அப்பொழுது அவர், அதனைப் பிடித்துக்கொள்ளுவர். முதலில் நாம் வேடர் செயல் கொடுமையானது என்று கருதினும், அசுணமா விற்கு இசையின் விருப்பம் எவ்வளவு மிகுந்துள்ளது என்று எண்ணிப் பார்க்கவேண்டும். இதனால், விலங்கிற் கும் இசையில் ஈடுபாடு நிரம்ப உண்டு என்று நாம், அறிகிறோம்.

விலங்குகளில் பெரிய உருவமுடைய யானைகளுக்கு இசையில் விருப்பம், நிரம்பவும் உண்டு. இசைக்கு யானை கள், வசப்பட்டு அடங்கி நடக்கும் என்று பழந்தமிழ் நூல்கள், கூறுகின்றன. தன்னிலை மாறி மதவெறி கொண்டுள்ள யானைகளும்,இசைக்குக் கீழ்ப்படிந்து நடக் கும். பெருங்கதை என்னும் நூலில் நளகிரி என்னும் மதம் பிடித்த யானையை உதயணன் என்பவன், வீணை வாசித்து அடக்கி, அதன்மேல் ஏறிச் செலுத்தினன் என்பது கூறப்பட்டுள்ளது. நம் தமிழ் நூல் ஒன்றில் மலையருகில் தினைக்கொல்லையைக் காவல் செய்துகொண்டிருந்த குறப் பெண் ஒருத்தி, இனிமையாகப் பாடிக்கொண்டிருந்தாள் என்றும், தினைக்கதிரை உண்ணவந்த யானை, தன் பசியை மறந்து இசை வயப்பட்டு மயங்கி நின்றுவிட்டது என் றும், ஒரு செய்தி, காணப்படுகின்றது.

தாய், தன் குழந்தையைத் தொட்டிலிலிட்டுத் தாலாட் டும் இசையில் அக்குழந்தை ஈடுபட்டு அப்படியே தூங்கி விடுவதை நாம், பார்த்திருக்கிறோம். பிடிவாதம் பிடித்து அழும் குழந்தைகள், தாய் பாடும் இனிய இசையைக் கேட்டு, அழுவதை நிறுத்திவிடுகின்றன.

கண்ணன், மிகச் சிறுவனாயிருந்தபொழுது கன்று களைக் காட்டிற்கு ஓட்டிப்போய் மேய்த்து வருவான்.

அக்கன்றுகள், பல இடங்களில் மேய்ந்து கொண்டிருக்கும். மாலையில் அவைகளை ஒன்றுகூட்ட அவன், குழல் ஊதுவான். அக்குழலிசையைக் கேட்டவுடன் கன்றுகள் அனைத்தும், கண்ணனிடம் வந்து கூடிநிற்கும். உடனே அவன் அவைகளை இசையால் வசப்படுத்திக் குழல் ஊதிக் கொண்டே வீட்டிற்கு ஓட்டிவந்துவிடுவான். பின்பு, பெரியவனானபொழுதும் பசுக்களை மாலைவேளையில் ஒன்றுசேர்க்க அவ்வாறே அவன் குழலிசையை எழுப்புவான். அவைகள், ஒன்றுகூடிக் கண்ணனிடம் வந்தடையும். அப்பசுக்கள், இசை வசப்பட்டுத் தம் காதுகளை அசைக்காமல் நின்றுகொண்டு கேட்கும்.

இவ்வளவு சிறப்புள்ள இசை, தமிழ் நாட்டில் பண்டைக்காலத்தில் உயர்ந்த நிலையில் இருந்தது. ஆனாய நாயனார், இந்தத் தமிழிசையால் இறைவனையும், உயிர்களையும் இசையில் ஈடுபடச்செய்தார் என்பதை நாம், பெரியபுராணத்தால் அறியலாம்.

நாம், பழைய தமிழிசையின் மேன்மையை ஒருவாறு சிலப்பதிகாரத்தால் தெரிந்துகொள்ளலாம். பல அருமையான இசை நூல்கள், கவனிப்பார் இல்லாமல் அழிந்து போயின. வேறு சில நூல்கள், கற்பாரும், ஆதரிப்பாருமின்றி அழிந்துபோயின. இப்பொழுது இசையொடு பாடக்கூடிய பள்ளு, குறவஞ்சி முதலியன காணப்படுகின்றன. தமிழ் நாட்டில் கருநாடகச் சங்கீதம், தோன்றி வளரத்தொடங்கியவுடன் தமிழிசை, சிறிது சிறிதாக மறைந்துபோயிற்று.

பழைய காலத்தில் வண்டி ஓட்டுவோர், ஏற்றம் இறைப்போர், உழுவோர், நாற்று நடுவோர் முதலிய

பலரும், தமிழிசையை ஓயாமல் தாம் பாடிக்கொண்டே தம் தொழிலைச் செய்வார். அறிஞர், தமிழிசையை இரு பிரிவாக்கிப் பண் என்றும், திறம் என்றும் கூறுவர்.

ஈசனும், இசையின் வயப்பட்டு உருகுவான். அன்பர்கள் யாவரும், இறைவனை இசைப்பாட்டால் பாடியே போற்றி வந்தனர். ஆழ்வார்களும், நாயன்மார் களும், பிரபந்த தேவாரங்களாகிய பாடல்களைத் தமிழ்ப் பண்ணமைத்துப் பாடித்தான் இறைவனைத் துதித் தனர்.

ஆகவே, ஓரறிவு உயிர் முதல் ஆறறிவுயிர் வரை உள்ள, உயிர்களையும், கடவுளரையும் இசை, தன் வசப் படுத்தவல்லது. உடலின் சோர்வையும், உள்ளத்தின் துயரத்தையும் போக்கி இது, இன்பம் அளிக்கவல்லது. இத்தகைய சிறப்பு அமைந்த இசையை மாணவர்கள், பல முறை பாடிப்பழகியும், பிறர் வாயிலாகக் கேட்டு இன்புற்றும் வாழ்வார்களாக.

## குறிப்புரை

இறைவன் - கடவுள். சீறி - கோபித்து. தணிந்து - அடங்கி. களிப்பு - மகிழ்ச்சி. மகுடி - ஒரு வாத்தியம். ஈடு பாடு - மனம் பற்றுதல். பண்டைக்காலம் - பழைய காலம். வாயிலாக – மூலமாக.

## வினாக்கள்

1. செடி கொடிகளும், இசையில் ஈடுபடும் என்பதை விளக்குக.

2. பாம்பு, இசையின் வசப்படும் என்பதை எப்படி அறிவீர் ?

3. அசுணமாவின் தன்மைகள் எவை ? விளக்குக.

4. உதயணன், கண்ணன், ஆனாய நாயனார் இவர்களைப் பற்றிக் குறிப்புத் தருக.

5. 'இறைவனும் இசைக்கு வசப்படுவான்' என்பதைத் தெளிவாக விளக்குக.

## இலக்கணம்

(1) பின்வரும் இறந்தகால வினைகளை நிகழ்கால வினைகளாக்குக.

அ. அசுணம், வீணையின் இசையைக் கேட்டு மகிழ்ந்தது.

ஆ. வண்டின் இசை கேட்டு மலர்கள், மலர்ந்தன.

(2) பின்வரும் நிகழ்கால வினைகளை இறந்தகால வினைகளாக்குக.

அ. வானம்பாடிகள், பாடத் தொடங்குகின்றன.

ஆ. பாம்பும், இசைகேட்டு வசப்படுகின்றது.

(3) பின்வரும் எதிர்கால வினைகளை நிகழ்கால வினைகளாக்குக.

அ. இசை விருப்பமுடையோர், தாமே பாடுவர்.

ஆ. கண்ணன், கன்றுகளை இசையால் வசப்படுத்தி விடுவான்.

## பயிற்சி

இப்பாடத்தில் வந்துள்ள நிகழ்கால வினைகளை, இறந்தகால வினைகளாக்கி எழுதிக் காட்டுக.

# 11. சாலையில் நடக்கும் முறை

தந்தை :—மணி, ஏனப்பா இன்று பள்ளியிலிருந்து வர இவ்வளவு நேரம்? பள்ளியில் ஏதாவது கொண்டாட்டம் நடந்ததா என்ன?

மணி :—கொண்டாட்டம் ஒன்றும் இல்லையப்பா; வரும் வழியில் ஓர் ஆபத்து நேர்ந்தது.



தந்தை :—ஆபத்தா? என்ன ஆபத்து அப்பா?

தாய் :—என்னப்பா அது? நீ பள்ளிக்கூடத்திலிருந்து வரும்வரையில் நீ நல்லபடி வரவேண்டுமே என்று நான் கவலைப் பட்டுக்கொண்டிருக்கிறேன்; விரைவில் சொல்.

மணி :—நான் பள்ளிக்கூடத்திலிருந்து நேரே வந்து கொண்டிருக்கும் பொழுது, ஒருவர் கால் மீது மோட்டார்

ஏறிவிட்டது; யாரோ பாவம்! அவர் பாதமும் விரல்களும் நசுங்கிவிட்டன; மெய்ம்மறந்து அப்படியே சாலையில் விழுந்துவிட்டார்.

தந்தை :—என்ன, பாதமே நசுங்கிவிட்டதா? ஐயோ பாவம்! அப்புறம் என்ன ஆயிற்று?

தாய் :—ஐயோ பாவம்! அவர் என்ன வருத்தப் பட்டிருப்பார்?

தந்தை :—சரி, மோட்டார் ஓட்டி என்ன காரணம் சொல்கிறான்?

மணி :—அவன் ஒன்றும் பேசாமல் பயந்து நிற்கிறான்; அங்கு ஓரேகூட்டம்; போலீசார், வந்துவிட்டனர்.

தாய் :—ஆமாம், சென்னைப் பட்டினத்தில் கூட்டத்திற்கு என்ன? எப்பொழுதும் கூட்டந்தான்; எங்கும் கூட்டந்தான்.

தந்தை :—சரி, அப்புறம் என்ன நடந்தது?

மணி :—வேறு கார் வந்து கால் நசுங்கியவரை வைத்திய சாலைக்கு எடுத்துச் சென்றது.

தந்தை :—நல்லது, அவருடைய பெயரும், முகவரியும் தெரிந்தனவா?

மணி :—நல்ல வேளை அப்பா, அவருடைய சட்டைப் பையில் நாள்குறிப்புப் புத்தகம் இருந்தது. அதிலிருந்து அவருடைய பெயர் முதலியன தெரிந்துவிட்டன; உடனே, அவருடைய உறவினர்களுக்குச் செய்தியும் தெரிவித்து ஆயிற்று.

தந்தை :—மணி, பார்த்தாயா! நாள்குறிப்புப் புத்தகத்தால் அல்லவா அவரைப்பற்றி அறியமுடிந்தது!

அதனால், எப்பொழுதும் எவரும் நாள் குறிப்பு வைத்திருப்பது நல்லது.

மணி :—சரி, ஏன் கார் ஓட்டி, அவர் கால்மேல் வண்டியை ஏற்றினன் ?

தந்தை :—கார் ஓட்டி வேண்டுமென்று ஒருவன் மேல் வண்டியை ஏற்றுவானு? அப்படிச் செய்தால் அவனுக்குத் தண்டனை ஏற்படும். நீண்ட காலம் சிறை வாசமும் கூடக் கிடைக்கும்.

மணி :—அப்படியானல், சென்னை போன்ற பெரிய நகரங்களில் ஏன் இப்படி அடிக்கடி ஆபத்துக்கள், நிகழ்கின்றன ?

தந்தை :—அதற்குப் பல காரணங்கள், உண்டு ; முக்கியமாகச் சாலையில் நடப்பவர், விதிகளை மீறி நடப்பதால் இவ்வாறு நேருகிறது.

மணி:—சாலையில் நடப்பதற்கும் விதிகள், உண்டா?

தந்தை :—நன்ருய்க் கேட்டாய் ! சாலையில் நடக்க அரசாங்கத்தார், பல விதிகளை ஏற்படுத்தியிருக்கிருர்கள்.

மணி :—அவற்றை நீங்கள் எனக்குச் சொல்லிக் கொடுக்கலாகாதா ?

தந்தை :—சாலையில் இரண்டு ஓரங்களில் நடந்து செல்கின்றவர், இடக்கைப்புறம் ஓரமாகவே செல்ல வேண்டும். சென்னை போன்ற பெரிய நகரங்களில் மக்கள் நடப்பதற்காகவே சாலைகளின் இருபுறமும் மேடைகள், கட்டியிருக்கிருர்கள். அவற்றின் மேல் நடப்பது நல்லது.

மணி :—ஏன் இடப்புறமாகச் செல்லவேண்டும் ?

தந்தை ;—நல்ல கேள்வி கேட்டாய்! வண்டிகள், இடப்புறமாகச் செல்ல வேண்டும் என்று விதி ; நீயும் இடப்புறமாகச் சென்றால் உன் பின்புறத்திலிருந்து வரும் வண்டிகளால் உனக்கு ஆபத்து நேராது ; அதுமட்டு மில்லை ; எதிரே வரும் வண்டிகள், உன்னை நோக்கி வருவதால் நீ அவ்வண்டிகளால் நேரும் ஆபத்துக்களைத் தடுக்கலாம்.

மணி :—இப்பொழுதுதான் இது, எனக்குத் தெரிந்தது. ஆனால், எதிர்ப்புறமுள்ள வீட்டிற்கோ, கடைக்கோ போகவேண்டுமென்றால் நேரே போய்விடலாமல்லவா ?

தந்தை :—அடடா, அப்பொழுதுதான் மிகவும் கவனித்துச் செல்லவேண்டும்.

மணி :—சாலையைக் கடக்க என்ன விதிகள் ? நான், இதுவரையில் ஒரு விதியையும் அறியாமல் சாலையைத் தாண்டித்தான் வருகிறேன்.

தந்தை :—அப்பா, இனி அப்படி நடக்காதே; சாலையைக் கடக்கும் விதிகள், மிகமுக்கியமானவை ; அவற்றைச் சரிவரக் கவனித்து நடக்காததால் பல தீங்குகள், நேருகின்றன.

மணி :—சாலையைக் கடக்கும் விதிகளைச் சொல்லுங்கள் ; அறிந்து கொள்கிறேன்.

தந்தை :—சாலையில் உன் வலப்புறத்திலிருந்து உன்னை நோக்கி வண்டிகள், வருகின்றனவா என்று பார் ; ஒன்று மில்லையென்றால், சாலையில் நேராகப் பாதிதூரம் செல் ; பின்பு உன் இடப்புறத்திலிருந்து வண்டிகள்

வருகின்றனவா என்று பார் ; வந்தால் அவை செல்லும் வரை நடுவில் நில் ; பின்பு நேராகப் போ ; அதன்பின் சாலையின் ஓரத்திலுள்ள மேடையில் ஏறிக்கொள்.

மணி :—இது என்ன ? "சாலையின் பாதிதூரம் வரை வலப்புறம் பார் ; பின்பு, இடப்புறம் பார்" என்கிறீர்களே, ஏன் அப்படிச் செய்யவேண்டும் ?

தந்தை :—சாலையை இருபாகமாகப்பிரித்திருக்கிறார்கள் ; முன் பாதியில் வரும் வண்டிகள் உன் வலதுபுறமாக வரும் ; அதனால்; பாதிதூரம் வலப்புறம் பார்க்கச் சொன்னேன் ; மற்றொரு பாதி, வரும் வண்டிகளுக்கு என்று ஒதுக்கப்பட்டுள்ளது ; அங்கு அவை உனது இடதுபுறமாக வருவதால் மற்றைய பாதிதூரத்தைக் கடக்கும்வரை, இடப்புறம் பார் என்றேன்.

மணி :—சாலையை இப்படி இருபிரிவாகப் பிரித்திருப்பதின் பொருள் இப்பொழுதுதான் விளங்கிற்று. அப்படிப் பிரிக்காவிட்டால் ஒரே புறமாக வண்டிகள் ஓடி மோதிக்கொள்ளவும் கூடும். ஆனால், நீங்கள் சாலையை நேராகக் கடக்கச் சொல்வது ஏன் ?

தந்தை :—நேராகச் செல்வதால் கடக்கும் தூரம் குறையும் ; அதனால் விரைவில் சாலையைத் தாண்டலாம்.

மணி :—இன்று நான் பார்த்த நிகழ்ச்சி, இரு சாலைகள் சேரும் இடத்தில் உண்டாயிற்று.

தந்தை :—முன்பே இதனைச் சொல்ல மறந்தேன். இரு சாலைகள் சேருமிடத்தைத் தாண்டுவது, மிகவும் கவனிக்கத் தகுந்தது. சாலைகள் கூடும் சந்திப்புக்களில் போலீஸ்காரன் நின்றுகொண்டு வண்டிகளைப் போக

விடுவதை நீ பார்த்திருக்கிறாய் அல்லவா? நாம், போலீஸ்காரன் சைகையைப் பார்த்தபின், சாலையைத் தாண்ட வேண்டும். மேலும், வேகமாக வண்டிகள் திரும்பினால் பெரிய ஆபத்துக்கள், உண்டாகலாம்.

மணி :—இன்னும் சாலையைப் பற்றிய விதிகள் இருந்தால் சொல்லுங்கள்; அறிந்து கொள்கிறேன்.

தந்தை ;—சாலையில் நின்று பேசலாகாது; கண்ணாடி, வாழைப் பழத்தோல் முதலிய பொருள்களைச் சாலையில் போடக்கூடாது; சாலையில் விளையாடுவது மிகவும் தவறு.

மணி :—இனி, நீங்கள் சொல்லியபடியே நடக்கின்றேன்.

தாய் :—மணி, நீ, தந்தை சொல்லியபடிக் கவனித்துச் சாலையைக் கடந்து செல்; எப்பொழுதும் இந்த விதிகளின்படி நடந்துகொள்.

## குறிப்புரை

மெய் - உடம்பு. முகவரி - விலாசம். விதிகள்-கட்டளைகள். சாலை - பாதை. தீங்குகள் - தீமைகள். சந்திப்பு - கூடுமிடம்.

## வினாக்கள்

1. நடந்து செல்பவர், சாலையில் எந்தப் புறமாகச் செல்லவேண்டும்? ஏன்?

2, சாலையைத் தாண்டும் பொழுது கவனிக்க வேண்டிய விதிகள், எவை?

3. சாலையைத் தூய்மையாக வைத்துக் கொள்வது எப்படி ?

4. சாலையில் நடக்கும் விதிகளைத் தொகுத்து எழுதுக.

## இலக்கணம்

(1) ஆண்பால் பெயர்களைப் பெண்பால் பெயர்களாக மாற்றுக :

தந்தை, மகனுக்கு அறிவு புகட்டினன்.
அரசன், நாட்டைக் காத்தான்.
மாணவன், நன்ருய்ப் படித்தான்.

(2) பெண்பால் பெயர்களை ஆண்பால் பெயர்களாக மாற்றுக :

மனைவி உணவைச் சமைத்தாள்.
குருடி, கோல் கொண்டு நடந்தாள்.
இறைவி, அருளுடன் பார்த்தாள்.

## பயிற்சி

பின்வரும் ஆண்பால் பெயர்களுக்குப் பெண்பால் பெயர்களும், பெண்பால் பெயர்களுக்கு ஆண்பால் பெயர்களும் வரைக :—

தந்தை, தலைவன், குறவன், வண்ணன், தம்பி, முடவன், அரசி, தோழி, மாமி, தங்கை, மாணவி, குயத்தி.

# 12. இரும்பு

மக்களுக்கு மிகவும் இன்றியமையாத உலோகம், இரும்பு. இது, பஞ்சலோகங்களில் ஒன்று. ஐந்து உலோகங்களாவன : பொன், இரும்பு, செம்பு, வெள்ளி, ஈயம் என்பன. மக்கள், இக்காலத்தில் இன்னும் புதிய புதிய உலோகங்களைக் கண்டறிந்திருக்கிறார்கள். எவ்வளவு உலோகங்கள் இருந்தாலும், மக்கள் எல்லோர்க்கும் நிரம்பப் பயன்படும் உலோகம் இரும்பேயாகும். அதனால் இதனை உலோகராசு என்று பெயரிட்டு அழைக்கத் தகும்.

மக்கள், இரும்பைப் பூமியிலிருந்து வெட்டி எடுக்கின்றனர். இரும்பு, தனியாகக் கிடைப்பதில்லை. இரும்புடன் கந்தகமும், கல்லும், மண்ணும் கலந்திருக்கும். பூமி நூலில் வல்லவர்கள், எங்கு இரும்புச் சுரங்கம் கிடைக்குமென்று கண்டறிவர். மண், கல், கந்தகம் இவற்றுடன் சேர்ந்து கிடக்கும் இரும்பைத் தனியே பிரித்து எடுக்க முடியும். மண் முதலியவற்றோடு கலந்த இரும்பைப் பெரிய தொட்டியிலிட்டுப்பின் உலையில் வைத்துக் காய்ச்சினால் கந்தகம், ஆவியாகப் போய்விடும் ; பின்னும் அதைக் காய்ச்சக் கல்லும், மண்ணும் உருகியோட இரும்பு, தனியே நின்றுவிடும்.

இந்தியாவில் பீஹார், மாயூர்பஞ்ச், கியான்ஜ்ஹார் என்னுமிடங்களில் இரும்புச்சுரங்கங்கள், உள்ளன. ஒரிஸாப் பிரதேசத்தில், ஆசியாவிலேயே மிகப்பெரிய நோவாமுந்தி, என்னும் இரும்புச் சுரங்கமிருக்கிறது.

மைசூர் இராச்சியத்தில் பத்திராவதிக்கு அருகிலுள்ள மலைப்பிரதேசத்தில் இரும்புச் சுரங்கங்கள், உள்ளன.

சென்னை இராச்சியத்தில் இரும்பு, சேலம்சில்லாவிலும், தென்னார்க்காடுசில்லாவிலும் அகப்படுகின்றது. உயர்தர இரும்பு, பீஹாரிலுள்ள ஸிங்பும் சில்லாவிலும் ஒரிஸாப் பிரதேசத்திலும் கிடைக்கின்றது.

இரும்பு, மூன்று வகைப்படும். ஒன்று : வார்ப்பு இரும்பு ; இதனால் சட்டிகள், கரி அடுப்பு முதலியன செய்யலாம். இரண்டு : தேனிரும்பு ; தேனிரும்பால் தகடு, சங்கிலி, ஆணி முதலியன செய்யலாம். மூன்று : எஃகு ; எஃகு, உயர்ந்த இரும்பாகும். கத்தி, தண்டவாளங்கள் முதலியன செய்யப் பயன்படுவது இதுவே. பத்திராவதியிலும், ஜாம்ஷெட்பூரிலும் பெரிய இரும்புத் தொழிற்சாலைகள், இருக்கின்றன.

இனி நாம், இரும்பின் உபயோகங்களைப் பார்ப்போம். இரும்பு இல்லாத வீடே கிடையாது. இரும்பினால் ஆணி, ஊசி, கத்தி, அரிவாள் முதலியன செய்யப்படுகின்றன. பயிர்த்தொழிலுக்குப் பயன்படும் கொழு, மண்வெட்டி, அரிவாள் இவை செய்ய இரும்பில்லாமல் எப்படி முடியும் ? விரைவாகச் செல்லும் புகைவண்டியின் இயந்திரங்கள், தண்டவாளங்கள் முதலியன, இரும்பினாலேயே செய்யப்பட்டவை யல்லவா ? இரும்பு, பாலங்கள் கட்ட உதவுகின்றது. இரும்பு உத்தரங்கள், பெரிய தொழில் சாலைகளின் இயந்திரங்கள், முதலியன இரும்பால் தான் செய்யப்படுகின்றன.

இவ்வாறு மிகச் சிறிய கருவியிலிருந்து மிகப் பெரிய பொருள் வரை இரும்பால் அமைவதை

அறியாதார் யார்? "இளைத்தவன் இரும்பைத் தின்பான்," என்ற பழமொழியைக் கேட்டிருக்கிறீர்களா? அரத்தால் அராவி எடுக்கப்பட்ட இரும்புத் தூள்களைப் பக்குவம் செய்து மருந்தாக மக்கள், உட்கொள்வார்கள். மிக வலிமைவாய்ந்த இரும்பிற்குப்பகை, தண்ணீரே. இரும்பு, தண்ணீரில் கிடந்தால் துருப்பிடித்துக் கெட்டுவிடும். ஆதலால், இரும்பு, பலநாள் பலத்துடனிருக்கவேண்டுமானால் துருப்பிடிக்காமல் பார்த்துக் கொள்ளவேண்டும்.

மக்கள், அனைவருக்கும் பயன்படும் இரும்பைக் கரும்பொன், என்றழைப்பர். பழைய காலத்தில் தமிழ் நாட்டில் வீரர்கள், இரும்பைப் போர்க் கருவிகள் செய்யப் பயன் படுத்திவந்தார்கள்; வேல்படை செய்ய இரும்பைத் தானே கையாளுகிறார்கள்; வாள் முதலியனவும், இரும்பால் தான் செய்யப்படுகின்றன.

மேலும், "கொல்லத் தெருவில் ஊசி விற்பதுபோல்" என்ற பழமொழி ஒன்று வழங்குவதையும் நீங்கள் கேட்டிருக்கலாம். இரும்புத் தொழில் செய்பவன், கொல்லன் எனப்படுவான். இரும்புத் தொழிலாளி ஒருவன், பழைய காலத்தில் தமிழ்ப் புலவனாகவும் விளங்கினான். அவன் பெயர், கொல்லன் அழிசி என்பது. அவன் பாடிய செய்யுள், குறுந்தொகை என்னும் சங்க நூலில் சேர்க்கப் பட்டுள்ளது.

மாணவர்களே! இக்காலத்தில் இரும்புத் தொழில், மிகவும் முன்னேற்றமடைந்துள்ளது. **நஸ்ஸர்வான்ஜி டாடா** என்பவர், இந்தியாவிலேயே பெரிய இயந்திரங்கள் செய்ய ஜாம்ஷெட்பூரில் பெரியதொரு இரும்புத் தொழிற் சாலையை மிகுந்த பொருட்செலவில் அமைத்திருக்கிறார்.

நாம், பெரிய இரும்பு இயந்திரங்களை அயல் நாடுகளி லிருந்து தான் பெற்று வருகின்றோம். இனி விடுதலை இந்தியாவில் இந்திய அரசாங்கத்தின் உதவியால் விரை வில் நமக்குத் தேவையானவற்றை நாம், இங்கே செய்து கொள்ளலாம்.

## குறிப்புரை

பஞ்சலோகம்—ஐந்து உலோகங்கள். கொழு—கூரான இரும்பு. அரிவாள்—அறுக்கும் கருவி. கருவி—ஆயுதம். அரம்—ஒரு ஆயுதம். அராவி—தூளாக்கி.

## வினாக்கள்

1. பஞ்சலோகங்கள் எவை ?

2. உலோகவரசு என்று நாம் எதை அழைக்கலாம் ? ஏன் ?

3. இரும்புடன் கலந்திருக்கும் பொருள்கள், எவை ?

4. இரும்பு, எத்தனை வகைப்படும் ? அவை எவை ?

5. இரும்பைப் பற்றிய இரண்டு, பழமொழிகளை வரைக.

6. நம் நாட்டில் இரும்புத் தொழிற்சாலைகள், எங்கு உள்ளன ?

## இலக்கணம்

ஒருமையைப் பன்மையாகவும், பன்மையை ஒருமையாக வும் மாற்றி வரைக :—

(1) இரும்பு வேல் செய்ய உதவும்.

(2) இயந்திரங்கள் நிரம்பப் பயன்படுகின்றன.

(3) இரும்பைத் தகடாகவும் அடிக்கலாம்.

(4) இளைத்தவன் இரும்பைத் தின்பான்.

## பயிற்சி

பசு, குதிரைகள், கண், விரல்கள், படம், புலிகள், யானை, மக்கள், தந்தை, தாய்—இச்சொற்களில் ஒருமை, பன்மைகளை எடுத்துத் தனித் தனியே எழுதுக.

——

## 13. வாஸ்கோ-ட-காமா

இந்தியாவிற்கும், ஐரோப்பாவிலுள்ள பல்வேறு நாடுகளுக்கும் நீண்டகாலமாக வாணிகம் நடந்து வருவதை யாவரும் அறிவர். கி. மு. 55ல், கிரீஸ் தேசத்திலிருந்து மகா அலெக்ஸாண்டர், இந்தியாவின்மீது படையெடுத்துவந்தார். அவர், தரை வழியாகவே வடமேற்குக் கணவாயில் நுழைந்து இந்தியாவை அடைந்தார். அவரைப்போல ஐரோப்பியர், அரேபியர், இன்னும் பல நாட்டினர் தரைவழியாகவே இந்தியாவுக்கு வந்து வாணிகம் செய்துவந்தனர். ஆனால், கி. பி. பதினைந்தாம் நூற்றாண்டில் அரேபியர், ஐரோப்பிய வியாபாரிகளைத் தங்கள் நாட்டின் வழியாகச் செல்லலாகாது என்று தடுத்தனர்.

இவ்வாறு தடுத்தபொழுது ஐரோப்பிய வியாபாரிகள், மனத்தளர்ச்சி அடையவில்லை; எப்படியாவது இந்தியாவிற்குப் புதியதொரு வழியைக் கண்டறிய வேண்டுமெனத் தீர்மானித்தனர். இந்தியா மிகவும் செல்வம் படைத்த நாடு என்று மேனாட்டினர், கேள்விப்பட்டிருந்தனர். அதனால், அவர்கள் பெரிய செல்வத்தைச் சம்பாதிக்க, இந்தியாவுடன் வாணிகம் செய்ய உறுதிகொண்டனர்.

ஐரோப்பாவிலுள்ள போர்ச்சுகல், ஸ்பெயின் என்னும் இரு நாட்டினரே முதலில் கடல் வழியாக இந்தியாவிற்குப் புதிய வழியைத்தேட முயன்றனர். போர்ச்சுகீசியராகிய டயஸ் என்பவர், ஆப்பிரிக்காவின் தென்முனை வரை வந்து திரும்பிப்போய்விட்டார்.

கொலம்பஸ் என்னும் மாலுமி, இந்தியாவைத் தேட முயன்று மேற்கே சென்ருர்; புதிய உலகமென்று சொல்லப்படும் அமெரிக்காவைக் கண்டார். மற்ருெருவர், இந்தியாவையே தேடி வந்தடைந்தார்; அவர்தாம் வாஸ்கோ-ட-காமா என்னும் வீரர்.

கி. பி. பதினைந்தாம் நூற்ருண்டின் பிற்பகுதியில் போர்ச்சுகல் என்னும் சிறு நாட்டை ஆண்டவர், டாம் மானுவெல் என்னும் அரசர் ஆவர். அவர், வாணிகத்தால் தான் தம் நாடு முன்னேறமுடியும் என்று நம்பி யிருந்தார்; இந்தியாவைப்பற்றி முன்பே கேள்விப்பட்டிருந்தார்; ஆகையால், இந்தியாவிற்குச்செல்ல கடல் வழியே ஒரு புதிய வழியைக் கண்டறிவது தம் கடமை என்று அவர், நினைத்தார். அவர், தம் கருத்தை வெற்றிபெறச்செய்யும் வீரர், யார் என்று ஆலோசித்தார்.

"இதனை இதனுல் இவன்முடிக்கு மென்றெண்ணி
அதனை அவன்கண் விடல்"

என்பது வள்ளுவர் வாய்மொழி அன்ருே? அதன்படி அம்மன்னர், வாஸ்கோ-ட-காமா என்னும் மனம்தளரா வீரரே இவ்வரும் பெரும்பணிக்குத் தகுதியானவர் என்று துணிந்தார். அந்த அரசர், அவரையே புதுவழி காண அனுப்ப எண்ணி நன்னுள் ஒன்று குறிப்பிட்டார்.

அந்த நாளும் வந்தடைந்தது; மக்கள் ஒன்றுகூடி, பாட்டுப்பாடியும், ஊர்வலம் வந்தும், தம் மகிழ்ச்சியை வெளிப்படுத்தினர்; வாஸ்கோ-ட-காமாவையும், அவர் குழுவினரையும் ஊக்கமூட்டினர். காமா, தரைப் படமும், கடல்வழியைக் காட்டும் படமும், வேண்டிய உணவுகளும் கையில் எடுத்துக்கொண்டனர்.

பின்பு, நான்கு கப்பல்களுடன் வாஸ்கோ-ட-காமா, போர்ச்சுகல் தேசத்திலிருந்து புறப்பட்டார். அக் காலத்துக் கப்பல் பயணம் மிகவும் பயங்கரமானது. நடுக்கடலில் திசை யறியவும், காற்று நிலையறியவும், ஆபத்தை அருகிலுள்ள துறைமுகத்திற்கு அறிவிக்கவும்




அக்காலத்தில் முடியாது. உணவு குறைந்துவிட்டாலும், நோய்வாய்ப்பட்டாலும் மரணந்தான் அடைய நேரும்.

இங்கிலையில் ஏறக்குறைய ஐயாயிரம் கல் கடப்பது மிகவும் அருமையல்லவா? வாஸ்கோ-ட-காமா, முதலில் தெற்குமுகமாகப்போனார். நன்னம்பிக்கை முனை வரும் போது காற்றால் தள்ளப்படவே தென் ஆப்பிரிக்காவின்

பக்கமாகக் கப்பல்கள், சென்றன. எங்கும் தரையே காணப்படவில்லை. சுமார் மூன்று மாதங்கள் அலைந்து மீண்டும், ஆப்பிரிக்காவின் தென் முனையை அணுகினர். இதற்கிடையில் இவருடன் வந்த மாலுமிகள், கலகம் விளைத்தனர்; அவர்களை இனிய மொழிகளால் துணிவு கொள்ளச்செய்து மீண்டும் பிரயாணம் செய்யத் தொடங்கினர்.

இவர், ஆப்பிரிக்காவின் கீழ்க்கரை ஓரமாக வந்து அங்குள்ள ஒரு நாட்டிற்கு "நேடால்" எனப் பெயரிட்டார். அங்கு அவர் ஒரு மாதகாலம் தங்கினர். அவருடன் வந்த துணைவர்களுக்கு நோய், உண்டாயிற்று. ஆண்டவனிடம் நம் வீரர், நம்பிக்கை உடையவர். அவருடன் வந்தவர்கள், இறைவனருளால் நோய் நீங்கிப் பிழைத்தனர். இவர்கள், மீண்டும் கிழக்காகப் பிரயாணம் செய்யத் தொடங்கினர்.

பின்பு அவர், 'மொஜாம்பக்' என்னும் தீவை அடைந்தார்; அங்கு இந்தியாவிலிருந்து வந்த சில அரேபியரைக் கண்டார். வாஸ்கோ-ட-காமாவுக்கு இந்தியாவைக் காணலாம் என்ற நம்பிக்கை, உண்டாயிற்று. மேலும், அவர், பிரயாணம் செய்யத்தொடங்கி அரபிக்கடலையடைந்தார்; இருபத்துமூன்று நாட்கள் அலைந்தார்; கடைசியில் 1497-ம் ஆண்டு மே மாதம் 21-ம் நாள் இந்தியாவின் மேற்குக் கடற்கரையிலுள்ள கள்ளிக்கோட்டையில் வந்து இறங்கினர். அப்பொழுது அவர் அடைந்த மகிழ்ச்சிக்கு எல்லை இல்லை. அவர், கப்பற் பிரயாணம் செய்யத்தொடங்கிய பதினோராவது மாதம் இந்தியாவை வந்தடைந்தார்.

அப்பொழுது நம் வீரர், கள்ளிக் கோட்டையை ஆண்டுவந்த சிற்றரசரைக் கண்டு அவருக்குப் பல பரிசுகளை வழங்கினர்; தம் நாட்டினர் இந்தியாவுடன் வாணிகம் செய்ய அநுமதி கேட்டார்; அருள் உள்ளம் கொண்ட அந்த அரசர், அதற்கு இசைந்தார். பின்பு இவர், புறப்பட்டுத் தம் தாய்நாட்டை மீண்டும் அடைந்தார்.

இவர், தம் தாய்நாட்டை அடைந்ததும் மன்னனும், மற்றவரும், இவரை மகிழ்ச்சியுடன் வரவேற்றனர். இவருக்குச் சிறந்த பட்டமும், உபகாரச் சம்பளமும், அரசரால் அளிக்கப்பட்டன. அந்த நாட்டு மக்கள் அனைவரும், இவரைக் கொண்டாடினர்.

வாஸ்கோ-ட-காமா, இந்தியாவிற்கு வந்து போன பின்பு, போர்ச்சுகீசியர் பலர், வாணிகம் செய்ய இந்தியாவிற்கு வந்தனர். முதல் முதலாக வாணிகம் செய்ய இந்தியாவிற்குக் கடல் வழியாக வந்த ஐரோப்பியர், போர்ச்சுகீசியரே ஆவர். இன்றும் போர்ச்சுகீசியருக்குச் சொந்தமாக இந்தியாவில் மூன்று ஊர்கள், உண்டு. அவை, மேற்குக் கடல்கரையிலிருக்கும் கோவா, டாமன், டையூ என்பனவாகும்.

## குறிப்புரை

வாணிகம் – வியாபாரம். உறுதி – துணிவு. மாலுமி – கப்பலோட்டி. வாய்மொழி – உண்மைமொழி. பணிக்கு – தொண்டிற்கு. நன்னாள் – நல்லநாள். கல் – மைல். உள்ளம் – மனம்.

## வினாக்கள்

1 அலெக்ஸாண்டர் யார்? இவர், இந்தியாவிற்கு எந்த வழியாக வந்தார்?

2. ஐரோப்பியர், இந்தியாவிற்குப் புதிய வழியை ஏன் தேடினர் ?

3. இந்தியாவிற்குக் கடல் வழியைத் தேட முயன்ற இரண்டு நாட்டினரைக் குறிப்பிடுக.

4. வாஸ்கோ-ட-காமாவின் கப்பல் பயணத்தை விளக்கி எழுதுக.

5. காமா, இந்தியாவில் எந்த ஊரில் எப்பொழுது வந்து சேர்ந்தார் ?

6. இந்தியாவில் போர்ச்சுகீசியருக்குச் சொந்தமான ஊர்கள், எவை ?

## இலக்கணம்

சேர்த்து எழுதிக் காட்டுக :—

| | |
|---|---|
| 1. மேல்+நாடு. | 5. தெற்கு+முனை. |
| 2. மனம்+தளர்ச்சி | 6. நிலை+அறிதல். |
| 3. கண்டு+அறிவது. | 7. கப்பல்+பயணம். |
| 4. ஊக்கம்+ஊட்டினர். | 8. மேற்கு+கடல். |

## பயிற்சி

1. இப்பாடத்தில் சிலவாக்கியங்களை எடுத்து எழுதிக் கொண்டு, அவற்றில் சேர்ந்து நிற்கும் சொற்களைப் பிரித்து எழுதுக.

2. பிரிந்து நிற்கும் சில சொற்களைப் பொருள் பொருத்தமுண்டாகச் சேர்த்து எழுதிக் காட்டுக.

---

## 14. குகன்—(நாடகம்)

இடம் :—கங்கைக்கரை.

காலம் :—மாலைநேரம்.

உறுப்பினர் :—குகன், வேடர்கள், பரதன், சத்துருக்கனன், சுமந்திரர்.

[இராமன், கைகேயி வரத்தால் நாடிழந்து காடடைந்தான்; இச்செய்தியை அறிந்த பரதன், நாட்டை இராமனுக்கே கொடுத்துவிட இராமனைத் தேடி வருகிறான்; இடை வழியில் பரதன், சேனையோடு வருவதை இராமன் நண்பனான குகன், பார்க்கிறான்; குகன், உண்மையை யறியாமல் இராமனோடு போர்செய்யப் பரதன் வருவதாக எண்ணிக்கொண்டு தன் படைவீரர்களை நோக்கி வீர மொழிகளைக் கூறுகிறான்.]

குகன் :—என் உயிர்த் தோழர்களே ! இந்தச் சேனை பரதன் சேனை ; பரதன், என் உயிர் நண்பனான இராமனைப் போரில் வெல்ல இப்படையோடு வருகிறான்; இன்று இதோ ஒருநொடியில் இச்சேனையை வானுலகமடையச் செய்வேன் ; இல்லையேல் என் நண்பனுக்காக என்னுயிரை விடுவேன் ; நீங்கள் துடியைக் கொட்டுங்கள் ; வழிகளை யடைத்துவிடுவீர் ; படகு ஒன்றையும் ஓட்டாதீர்கள் ; இப்படையில் வருவோர் அனைவரையும் வெட்டி எறியுங்கள் ; என் உயிர் நண்பன் ஆளவேண்டிய

நாட்டைக் கைப்பற்றியவன் இவன்; இராமன் என்னைத் தன் தோழன் என்று முறை கொண்டாடிய பின், இப்பரதன், பிழைத்துப் போகும்படி நான் விடமாட்டேன்; இப்பரதன், அண்ணன் என்றும் பாராமல் போரிட வந்தானல்லவா? நான் விடும் அம்பு, இவன் மார்பில் தைக்காமல் போய்விடுமா? பார்த்துவிடுகிறேன். (என்று கூறிக்கொண்டே குகன், கங்கையின் தென்கரையில் வந்துநின்றான்.)

[கங்கையின் வடகரையில் பரதன், தன் தம்பியுடனும் சுமந்திரனுடனும் வந்து நின்றான்.]

பரதன் :—அறிவில் சிறந்த அமைச்சரே! அதோ கங்கையின் தென்கரையில் வந்து நிற்பவன் யார்?

சுமந்திரர் :—பரத! அவன் கங்கையின் இரு கரைகளுக்கும் உரியவன்; இராமபிரானுடைய உயிர் நண்பன்; குகன் என்னும் பெயருடையவன்; உன்னைக் காண வேண்டுமென்று நிற்கின்றான்.

பரதன் :—அயோத்தியின் அரசனான என் அண்ணனிடம் நட்புடையவனாயின், என்னை வந்து அவன்காணும் முன், நானே சென்று அவனைக் காண்பேன்.

குகன் :—இந்தப் பரதனைப் பார்த்தால் இவன் என் நண்பன் இராமனைப்போலவே இருக்கின்றான். இவன் அருகில் நிற்பவன், இலக்குமணனே போலிருக்கிறான்; இருவரும் தவவேடமுடன் இருக்கின்றார்கள்; இவர்கள் துயரத்தோடு இராமன் சென்ற திசையை நோக்கித் தொழுகின்றனர்; இராமன் பின் பிறந்தோர் பிழை செய்யமாட்டார். நான் இவரைப் பற்றி வேறாக எண்ணியது தவறு. இவர்கள்

உண்மை நிலையை நேரில் சென்று அறிந்து வருகின்றேன். (வேடர்களை நோக்கி) நான் வரும்வரையில் வழிகளைக் காவல் செய்துகொண்டிருப்பீர்.

[குகனும், பரதனும் சந்தித்து ஒருவரை ஒருவர் வணங்கிக் கொள்ளுகின்றனர்.]

**குகன்** :—எம்பெருமானே ! தாங்கள் இவ்வளவு தூரம் வந்த காரணம் யாதோ ?

**பரதன்** :—அன்பனே ! உலகமுழுதும் ஆண்ட என் தந்தை, முன்னோர் நடந்தபடி மூத்தவனுக்கு அரசு தரவில்லை. நான், நேரில் இராமனிடம் சென்று வணங்கி அவரை அயோத்திக்கு அழைத்துப்போய் அரசராக்க வந்தேன். யான் வந்த காரணம் இது தான்.

**குகன்** :—(மறுபடியும் குகன் பரதனை வணங்குதல்) நற்குணம் மிகுந்த வள்ளலே ! நீர் உம் தாயின் மொழியைக்கேட்டுத் தந்தை கொடுத்த அரசை வேண்டாம் என்று வெறுத்தீர் ; முறையன்றி வரும் அரசு பாபத்தைத் தரும் என்று எண்ணினீர் ; இராமனையே அரசனுக்க வேண்டுமென்று அவன் சென்ற இடம் தேடிச் செல்கின்றீர் ; ஆயிரம் இராமர் ஒன்றுசேரினும் உமக்கு ஒப்பாக மாட்டார் என்று நான், எண்ணுகின்றேன்.

**பரதன்** :—வேடர்பெருமானே! இங்குத் தங்கியபொழுது இராமன், எவ்விடத்தில் தங்கியிருந்தார் ? அவ்விடத்தை எனக்குக் காட்டுவீர்.

[குகன், பரதனை அழைத்துச்சென்று இராமன் படுத்திருந்த இடத்தைக் காட்டுகிறான்.]

குகன் :—பெரும் புகழுடைய பெரியீர்! இதோ காணப் படும் கற்பாறையில் பரப்பியுள்ள புல்லின்மேல் எம்பெருமான் தங்கியிருந்தான்; அந்த இடம் இது தான்.

பரதன் :—என் அண்ணன் தங்கியிருந்த இடம் இது வாயின், தம்பி இலக்குமணன் தங்கியிருந்த இடம் எது?

குகன் :—குணக்கடலே! இலக்குமணன் தனக்கென்று தனியிடம் தேடித் தங்கவில்லை. எம்பெருமானும், சீதையும் இப்பாறைமீது தூங்கிக்கொண்டிருந்த பொழுது, அவர்களுக்குக் காவலாக இலக்குமணன் நின்றுகொண்டிருந்தான்; இரவெல்லாம் தன் கண் இமைக்காமல் கையில் வில்லைத் தாங்கி இவ்விடத் தில் நின்றபடியே இருந்தான்.

பரதன் :—அன்பனே! இராமன் தம்பிமார்களில் நான் இராமபிரானுக்குத் துன்பங் கொடுக்கப் பிறந்தேன். அவன் அத்துன்பத்தை நீக்கப்பிறந்தான். யானும் இராமனுக்கு ஒரு தம்பி; இலக்குமணனும் ஒரு தம்பி; என் அடிமை மிகவும் அழகாகவுள்ளது!

குகன் :—இராமன் தம்பிமார்களாகிய உங்களில் எவரும் தாழ்ந்தவர் அல்லர். அப்படித் தங்களைத் தாழ்வாக மதிக்க நான் இடந்தரமாட்டேன்; இலக்குமணப் பெருமான் உயர்ந்த முத்து; பரதனாகிய தாங்கள் சிறந்த மணி; யான் உங்கள் பாதத்தில் ஒட்டியுள்ள மண்பொடி.

பரதன் :—இராமனடியாருள் சிறந்த பெரியீர் ! தங்களை அப்படி மதிக்கவேண்டாம் ; உங்கள் மொழியைத் தக்கபடி மதித்தால் தாங்கள் தொண்டரடிப் பொடியேதான். குகப்பெருமானே ! இன்றிரவு நாங்கள் இங்குத் தங்கியிருக்கின்றோம் ; நாளைக் காலையில் கங்கையைக் கடந்து அக்கரையில் ஏறும் படிச் செய்வீர் ; அதன்பின் யான், இராமபிரானைக் கண்டு துயரக்கடல் கடந்து கரையேறவேண்டும்.

## குறிப்புரை

வானுலகம் - தேவலோகம். துடி - ஒருவகை வாத்தியம். பிழைத்துப்போதல் - தப்பிப்போதல். அமைச்சர் - மந்திரி. மரவுரி - மரநாராலான ஆடை. முறை - நீதி. குணக்கடல் - குணம் நிரம்பியுள்ள கடல். துயரம் - துக்கம்.

## வினாக்கள்

1. குகன், தன் படைவீரர்களை நோக்கிக் கூறிய வீர மொழிகள் எவை ?

2. பரதனிடமுள்ள சிறந்த குணங்கள் எவை ?

3. இராக்காலங்களில் இலக்குமணன், இராமனுக்குச் செய்த தொண்டு, என்ன ?

4. குகன், பரதனை இராமனுக்குப் பகைவனல்லன் என்று, எப்படி அறிந்தான் ?

5. " இராமன் பின் பிறந்தோர், பிழை செய்ய மாட்டார் " இப்படி யார், எப்பொழுது கூறினர் ?

## இலக்கணம்

கீழ்வரும் வாக்கியங்களில் கோடிட்ட இடங்களில் ஏற்ற வேற்றுமை உருபுகளை அமைத்துவிடுக.

1. குகன் பரதன் சேனை—நோக்கினான்.
2. குகன் தலை—வணங்கினான்.
3. குகன் தென்கரை—வந்து நின்றான்.
4. இராமன்—நண்பன் குகன்.

## பயிற்சி

ஒரு வாக்கியத்தில் இரண்டாம் வேற்றுமையும், மூன்றாம் வேற்றுமையும் வரும்படி வரைக.

---

## 15. தில்லைமா நகர்

மக்கள் பிறப்பெடுத்தவர், தில்லையின் எல்லையை மிதிப்பாராயின் பயன்பெற்றவராவர்; சிவாலயத்துள் நுழைவராயின் தீவினையைத் தொலைத்தவராவர்; கூத்தப் பெருமானையும்,கோவிந்தராசனையும் கண்டு தொழுவரா்யின் வீட்டுலகை அடைந்தவர் ஆவர். கண்டு தொழுதால் வீடு அளிக்கும் தலம் இது அல்லவா? ஒருவன், எல்லாக் கலையும் நிறைந்த ஒரு நகரத்தைக் காண விரும்பினால் சிதம்பரத்தைத் தான் காணவேண்டும்; தமிழ் மொழி, வளர்ந்து வருமிடம் தில்லையே; வடமொழி, வளர்வதும் அங்குத்தான்; இசைக்கலை, ஏற்றமடைவதும் அவ்விடத்திலேயே; மற்றக் கலைகள் பலவும், அங்கு நாடோறும் மேன்மை பெற்று வருவதை நாமே அறிவோம்.

அவ்வூரின் அருகிலுள்ள அண்ணுமலை நகரில் அண்ணுமலைப் பல்கலைக்கழகம், ஸர். இராஜா அண்ணுமலைச் செட்டியாரால் பெரும் பொருள் செலவிட்டு அமைக்கப்பட்டிருப்பதை யாவரும் அறிவர். மேற்கூறிய மொழிகளும், கலைகளும் அந்த அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில் நாடோறும் வளர்ந்து வருகின்றன. பேரறிஞர் பலர் அதில் பேராசிரியராக அமர்ந்துள்ளனர். அவர்கள், உண்மையான உழைப்பெடுத்து, மாணவர்கள் முன்னேற்றமடையச் செய்து வருகின்றனர்; ஆண்டுகள் தோறும் நூற்றுக்கணக்கான மாணவர்கள், படிப்பில் தேர்ச்சி பெற்று வருகின்றனர்.

நம் நாட்டுச் சிறுவரும், சிறுமியரும் அறிவுச்செல்வம் பெற இவ்வாறு ஒரு ஒப்பற்ற பேரறத்தைச் செய்த ஸர். இராஜா, அண்ணாமலைச் செட்டியார் பெரும்புகழ், உலகம் உள்ளவரையில் நிலைத்திருக்குமல்லவா ? மக்களாய்த் தோன்றியவர், அவரைப் போல் புகழை உலகில் நாட்டவேண்டும்.

"தோன்றின் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலின் தோன்றாமை நன்று."

என்றபடி, புகழைச் சிறிதும் தேடாதவர், பிறப்பெடுத்ததைவிடப்பிறவாதிருப்பின் பூமிக்குப் பாரம் இல்லாமல் இருக்கும்.

ஸர். இராஜா, அண்ணாமலைச் செட்டியார் அவர்கள், ஆதியில் மீனாக்ஷிக் கல்லூரி ஏற்படுத்தும்போது சிதம்பரத்தில்தான் ஏற்படுத்த வேண்டும் என்று எண்ணிச் செய்தார்.

உரைநடை எழுதுவதிலும், உரை எழுதுவதிலும் பேர் படைத்த உயர்திரு—ஆறுமுக நாவலர் அவர்கள், சிதம்பரத்தில் தான் வந்து தங்கியிருந்தார். அவர், சிதம்பரமே கல்விக்கு இருப்பிடமான இடம் என்று கருதியவர் ; அவர்தமது பெயரால் நாவலர் கலாசாலை என்று ஒன்று ஏற்படுத்தியுள்ளார் ; அக்கலாசாலை, இப்பொழுதும் நடந்து வருகிறது ; அக்கலாசாலையில் தமிழ் மொழி, சிறப்பாகக் கற்றுக் கொடுக்கப்பட்டுவருகிறது.

தமிழ்க் கல்லூரி, முதன்முதல் தோன்றிய பொழுது சிதம்பரம் தெற்கு மாடவீதியில் பல்லவராயப் பட்டுச்

சத்திரத்தில் தான் தோன்றிற்று. அக்கல்லூரிக்குத் தலைமைப் பேராசிரியராக உயர்திரு - டாக்டர். உ. வே. சாமிநாதையர் அவர்கள், அமர்ந்திருந்தார். அப்பெரியார், தமிழ்மொழிக்குப் புத்துயிர் ஊட்டியவர். அவர், சில ஆண்டுகளாவது அங்குத் தங்கியிருக்கவேண்டு மென்று அப்பணியை ஏற்றார். ஸ்ரீமான், மஹா மஹோபாத்தியாயராகிய தண்டபாணி சுவாமி தீக்ஷிதர் வடமொழிக் கல்லூரியின் தலைவராக இருந்து இவ்வூர்க்கீழை மாட வீதியில் அக்கல்லூரியை அமைத்து நடத்திவந்தார். இந்தப் பேரறிஞர், இவ்வூரில் பிறந்தவர்.

கூத்தப் பெருமான் கோயிலின் நாற்புறங்களில் கிழக்கே, மீனாக்ஷி வடமொழிக் கல்லூரி; தெற்கே, மீனாக்ஷித் தமிழ்க் கல்லூரி; மேற்கே, நாவலர் கல்லூரி; வடக்கே, மறையோதும் வேத பாடசாலை; இவ்வாறு அமைந்திருக்கும் பெருமை ஒரு சமயம் இந்தத் தலத்திற்கு ஏற்பட்டிருந்தது.

இவ்வாறு கல்விக் கழகங்கள் நாற்புறமும் நிரம்பியிருந்தபொழுது சிதம்பரத்தில் மாலையில் இக்கல்லூரியில் படிக்கும் மாணவர் எல்லோரும், கோவிலுக்குச் செல்வர்; தென்மொழி வடமொழி வேறுபாடின்றி அளவளாவுவர்; இறைவன் முன்னின்று தண்டனிட்டு வணங்குவர்; வேறு தலத்திற்கு அமையாத தனிச் சிறப்பு, இங்கு உண்டு. கூத்தப் பெருமான் முன் கும்பிட்டு நின்றால், கோவிந்தப் பெருமானுக்கும் அக்கும்பிடு, உரியதாகும். கும்பிடு ஒன்றே; அது சேருவது இரு கடவுளர்க்கு. இவ்வாறு சமய ஒற்றுமை ஏற்பட இருகடவுள்களையும் அமைத்துக் கோயில் கட்டியிருப்பதை நேரில் கண்டு நாம், களிக்க வேண்டும். பொன்னம்பலத்தின் தென்புறம்

ஒரு பக்தன் நின்ருல், அவன் கோவிந்தராசனுக்குக் கீழ்ப் புறம் (அதாவது முன்பு) நிற்பவனுவான். அவன் வணங் கும் பொழுது அவ்வணக்கம், இருகடவுள்களுக்கும் சேரு கின்றது. இந்தத் தலம், பெரிய புராணம் தோன்ற இடமாக இருந்தது ; இங்குள்ள கூத்தப்பெருமான் “ உலகெலாம் ” என்று அடி எடுத்துத் தந்த பின், சேக் கிழார் பெருமான், பெரிய் புராணம் பாடினுர்.

தமிழ் நாட்டில் கம்பன் வாழ்ந்த காலத்தில் இங்கு வாழும் தீக்ஷிதர் அனைவரும், தமிழ்க் கல்வியில் நிரம்பி யிருந்தார் என்பது தெரிய வருகிறது. இந்த அந்தணர் களிடம் கம்பன், இராமாயணம் அரங்கேற்றச் சம்மதம் பெற்றதாக ஒரு வரலாறு உண்டு.

சுந்தரமூர்த்தி சுவாமிகள், திருத்தொண்டத் தொகை யின் தொடக்கத்தில், “ தில்லை வாழ் அந்தணர் தம் அடி யார்க்கும் அடியேன் ” என்று பாடியிருக்கிருர். கடவுள் பக்தியிலும், கல்வியிலும் சிறந்த சுந்தரர் போற்றும் நிலை யில் அவ்வூர் அந்தணர்கள் வாழ்ந்தவர் என்பது நாம் அறியத் தக்கது.

கல்வியைச் சென்னையிலும், சில ஊர்களிலும் வளர்க்க எண்ணிய உயர்திரு. பச்சையப்ப முதலியாரும், இவ்வூரில் ஒரு உயர்நிலைப் பள்ளி அமைத்திருக்கிருர் ; உயர்திரு. இராமசாமிச் செட்டியார் என்ற அறிவிற் சிறந்த பெரியார், தம் பெயரால் ஒரு உயர்நிலைப் பள்ளியை இவ்வூரில் ஏற்படுத்தியுள்ளார் ; வேறு உயர் நிலைப் பள்ளிகளும், பல ஆரம்பப் பாடசாலைகளும் இங்கு உள்ளன.

இவ்வூர் ஆலயத்தில் கோபுரத்திலும், மதில் சுவரி லும் பல கல்வெட்டுக்களும், பாடல்களும் செதுக்கப்

பட்டுள்ளன. ஆலயத்திலுள்ள எல்லாக் கோபுரங்களும் மிகவும் அழகு படைத்தவை; நெடுந்தூரத்திலிருந்தே கண்டு ஈடுபடும்படி நந்தனுரைச் செய்து வைத்தவை; கூத்தப்பெருமான் பொன்னம்பலம், பொன்தகடு வேய்ந்து கண்ணைக் கவரும் நிலையில் அமைந்துள்ளது. அப்பெருமானைத் தொட்டு வழிபாடு செய்யும் அந்தணர்கள், பக்தியுடன் காலந்தவருமல் கடவுள் பூசைகளை ஆறுகாலமும் நடத்தி வருகின்றனர்.

இந்தச் சிதம்பர நகரம், நான்கு மாடவீதிகளுடன் பார்ப்பதற்கு மிகவும் அழகாக விளங்கும். இந்த ஊர் வழியாகக் கொள்ளிடத்திலிருந்து பிரிந்து "பாலமான்" என்ருெரு ஆறு ஓடுகிறது. சிதம்பரம், தென்னுர்க்காட்டின் எல்லையிலிருப்பினும் சோழ வளநாட்டைப் போல் செழிப்புடன் காணப்படும்.

இத்தகைய சிறப்பு வாய்ந்த நகரத்தை நாம், நேரில் கண்டு அங்குச் சிலநாள் தங்கி மனத்தில் மகிழ்ச்சியை யடையவேண்டும்.

## குறிப்புரை

தில்லைநகர்-சிதம்பரம். இசைக்கலை-சங்கீதம். ஏற்றம்-மேன்மை. தோன்றின்-பிறந்தால். ஆதியில்-பழைய காலத்தில். புத்துயிர்-புதிய உயிர். மறை—வேதம். அளவளாவுவர்-நலம் விசாரிப்பர். வரலாறு-சரித்திரம். போற்றும்-துதிக்கும். அம்பலம்—சபை. வேய்ந்து—மூடப்பட்டு. செழிப்பு—வளப்பம்.

## வினுக்கள்

1. அண்ணுமலைப் பல்கலைக்கழகம் ஏற்படுத்தியவர், யார்?

2. உயர்திரு. ஆறுமுக நாவலர் அவர்களைப் பற்றிக் குறிப்புத் தருக.

3. சிதம்பரத்தில் மீநாக்ஷித் தமிழ்க் கல்லூரி, எவ்விடத்திலிருந்தது ?

4. பெரிய புராணம் பாட அடிஎடுத்துக் கொடுத்தவர், யார் ? அந்த அடி, எது ?

5. தில்லையில் வாழும் அந்தணரைப் பற்றிக் குறிப்புத் தருக.

6. 'நடராசப் பெருமானை வணங்கினால் அது கோவிந்தராசனையும் வணங்கியதாம்' இதனை விளக்குக.

## இலக்கணம்

பின்வருவனவற்றைப் பிரித்து எழுதுக :—

(1) ஏற்றமடைவர்
(2) மேற்கூறிய
(3) புத்துயிர்
(4) பொன்னம்பலம்
(5) நாற்புறம்
(6) அறிவிற்சிறந்த
(7) நெடுந்தூரம்
(8) பழங்காலம்

## பயிற்சி

இப்பாடத்தில் சேர்ந்து நிற்கும் சொற்களைப் பிரித்து எழுதுக.

---

# I. வாழ்த்து

## 1. கலைமகள்

[சரஸ்வதி தேவியைக் குறித்துக் கம்பர் பாடிய செய்யுள் இது. கம்பர், தமிழில் இராமாயணம் பாடியிருக்கிறார். இவர், சோழ நாட்டில் திருவழுந்தூரில் பிறந்தவர்; வைணவர். இவர் வாழ்ந்த காலம், கி. பி. 12-ஆம் நூற்றாண்டு.]

ஆய கலைகள் அறுபத்து நான்கினையும்
ஏய உணர்விக்கும் என்னம்மை—தூய
உருப்பளிங்கு போல்வாள்என் உள்ளத்தி னுள்ளே
இருப்பளிங்கு வாரா திடர். —கம்பர்.

### குறிப்புரை

உரு - வடிவம். இருப்பள் + இங்கு = இருப்பளிங்கு. இடர் - துன்பம். தூய - சுத்தமான.

### வினாக்கள்

(1) கலைகள் எத்தனை ?
(2) கலைமகளின் உரு, எதைப்போன்றது ?
(3) கம்பர், ஏன் தமக்குத் துன்பம் வராது என்கிறார் ?

## 2. தேவாரம்

[இது, சைவ சமய நூல். இச்செய்யுள், திருநாவுக்கரசர் பாடியது. திருநாவுக்கரசர், சைவசமயப் பெரியார்

நால்வருள் ஒருவர். இவர், கி. பி. ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர்.]

சிந்திப் பார்மனத் தான்சிவன் செஞ்சுடர்
அந்தி வான்நிறத் தான்அணி யார்மதி
முந்திச் சூடிய முக்கணி னானடி
வந்திப் பாரவர் வானுல காள்வரே.

—திருநாவுக்கரசர்.

## குறிப்புரை

அந்தி-மாலைப்பொழுது. மதி-சந்திரன். முக்கணினான்-மூன்று கண்களுள்ள சிவன். வானுலகு – தேவருலகம். வந்திப்பார் – துதிப்பவர்.

## வினாக்கள்

(1) சிவன், எந்த நிறத்தை யுடையவன் ?
(2) அவன், சடையில் எதைச் சூடியுள்ளான் ?
(3) சிவனைத் துதிப்பவர், எதனை ஆள்வர் ?

# 3. பிரபந்தம்

[இது, ஒரு வைணவ நூல். இந்நூலில் பல ஆழ்வார்கள் பாடிய செய்யுட்கள், உள்ளன. இச்செய்யுள், பேயாழ்வார் பாடியது. இவர், கி. பி. ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர்.]

நாமம் பலசொல்லி நாராயணா என்று
நாமங்கையால் தொழுதும் நன்னெஞ்சே—வாமருவி
மண்ணுலகம் உண்டுமிழ்ந்த வண்டறையும் தண்துழாய்க்
கண்ணனையே காண்கநம் கண்.

—பேயாழ்வார்.

### குறிப்புரை

நாமம்–பெயர். அகம்+கை=அங்கை (உள்ளங்கை). அறையும்-ஒலிக்கும். துழாய்-துளசி.

### வினாக்கள்

(1) நெஞ்சிற்கு ஆழ்வார், என்ன கூறுகிறார் ?
(2) திருமால் செய்த ஒரு அருஞ் செயலைக் கூறுக.
(3) ஆழ்வார், யாரைக் காண விரும்புகிறார் ?

## 4. ஏசுநாதர்

[இச்செய்யுள், இரட்சணிய யாத்திரிகம் என்னும் நூலிலுள்ளது. அந்நூலைப் பாடியவர், H. A. கிருஷ்ணப் பிள்ளை. அவர், கிறிஸ்தவர்; காலம், கி. பி. 1827 – 1900].

வானமும் பூமியும் மகிழ்கொண் டோங்கிட
ஞானமும் நன்மையும் நனிசி றந்திட
ஊனமும் பாவமும் ஒழியத் தோன்றிய
தீனரட் சகன்பதம் சிந்தித் தேத்துவாம்.

—H. A. கிருஷ்ணப்பிள்ளை.

### குறிப்புரை

மகிழ் – இன்பம். நனி – மிகவும். ஊனம் – குற்றம். தீனரட்சகன் – ஏழைகளைக் காப்பவன். பதம் – திருவடி. ஏத்துவாம்–துதிப்போம்.

### வினாக்கள்

(1) ஏசுமகான் தோன்றியதால் ஏற்பட்ட நன்மைகள், எவை ?

(2) ஊனம், பதம், தீனரட்சகன்—பொருள் கூறுக.

## 5. முகம்மதுநபி

[இச்செய்யுளைப் பாடியவர் மஸ்தான் சாகிபு; சுமார் 200 ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்தவர்; இஸ்லாம் மதத்தைச் சேர்ந்தவர்.]

ஆதியாய் அநாதியாகி அரும்பொருள் அனைத்துமாகிச்
சோதியாய்ச் சொரூப ஞானச் சுடரொளித் தீபமாகி
நீதியாய்த் திறமையாகி நித்தியா னந்த மாகி
மாதிரப் புயமு மான மகம்மதே வருகு வீரே.

—மஸ்தான்சாகிபு.

### குறிப்புரை

ஆதி - முதல். அநாதி - முடிவில்லாதது. நித்தியானந்தம் - எக்காலத்தும் இன்பம். மாதிரம் - மலை, திசை.

### வினாக்கள்

(1) இச்செய்யுள், மகம்மது எவ்வெவ்வாறு இருப்பதாகக் கூறுகின்றது ?

(2) அநாதி, நித்தியானந்தம், மாதிரம்—இம்மொழிகளின் பொருள் கூறுக.

## 6. பாரதமாதா

[இச்செய்யுளைப் பாடியவர், சி. சுப்பிரமணிய பாரதியார்; இவர் ஒரு தேசியக் கவியாவர்; கி. பி. 1882-ல் திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள எட்டையபுரத்தில் தோன்றி 1921-ல் மறைந்தவர்.]

மதலையர் எழுப்பவும் தாய் துயில்வாயோ ?
மாநிலம் பெற்றவள் இஃதுணராயோ ?
குதலை மொழிக்கிரங் காதொரு தாயோ ?
கோமகளே ! பெரும் பாரதர்க்கரசே !
விதமுறு நின்மொழி பதினெட்டுங்கூறி
வேண்டிய வாறுனைப் பாடுதுங் காணாய் !
இதமுற வந்தெமை யாண்டருள் செய்வாய் !
ஈன்றவளே ! பள்ளி எழுந்தருளாயே !

—சி. சுப்பிரமணியபாரதியார்.

### குறிப்புரை

மதலையர் - மக்கள். குதலை - நிரம்பாதசொல். விதம் - வகை. இதம் - இனிமை. ஈன்றவள் - பெற்றவள்.

### வினாக்கள்

(1) ஆசிரியர், பாரதத் தாயை எவ்வாறு பாடுவேம் என்கிறார் ?

(2) ஆசிரியர், பாரதத் தாயிடம் வேண்டுவது என்ன ?

——

# II. நீதி

## 1. திருக்குறள்

[திருக்குறள் - தெய்வத்தன்மையுள்ள குறள் வெண்பா. இந்த நூல், தமிழ்மறை என்று வழங்கும். இந் நூலின் ஆசிரியர், திருவள்ளுவர் ; சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் இருந்தவர்.]

கடவுள் வாழ்த்து

அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு. (1)

பெரியாரும் சிறியாரும்

செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார். (2)

மகன் கடமை

மகன்தந்தைக்(கு) ஆற்றும் உதவி இவன்தந்தை
என்நோற்றான் கொல்எனும் சொல். (3)

நன்றி மறவாமை

நன்றி மறப்பது நன்(று)அன்று நன்றல்ல(து)
அன்றே மறப்பது நன்று. (4)

இன்சொல் கூறல்

இனிய உளவாக இன்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று. (5)

நாவடக்கம்

யாகாவார் ஆயினும் நாகாக்க காவாக்கால்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு. (6)

பொறுமை

ஒறுத்தார்க்(கு) ஒருநாளை இன்பம் பொறுத்தார்க்குப்
பொன்றும் துணையும் புகழ். (7)

புறங்கூறாமை

ஏதிலார் குற்றம்போல் தங்குற்றம் காண்கிற்பின்
தீதுண்டோ மன்னும் உயிர்க்கு. (8)

பயனுடைய சொல்

சொல்லுக சொல்லில் பயனுடைய சொல்லற்க
சொல்லில் பயனிலாச் சொல். (9)

புகழ்

தோன்றின் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலின் தோன்றாமை நன்று. (10)

கடுஞ்சொல் சொல்லாமை

தீயினால் சுட்டபுண் உள்ளாறும் ஆறாதே
நாவினால் சுட்ட வடு. (11)

உண்மை

புறம்தூய்மை நீரான் அமையும் அகம்தூய்மை
வாய்மையால் காணப் படும். (12)

கல்வி

கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக. (13)

கேள்வி

செல்வத்துள் செல்வம் செவிச்செல்வம் அச்செல்வம்
செல்வத்துள் எல்லாம் தலை. (14)

அறிவு

அறிவுடையார் எல்லாம் உடையார் அறிவிலார்
என்னுடைய ரேனும் இலர். (15)

வருமுன் காத்தல்

வருமுன்னர்க் காவா தான் வாழ்க்கை எரிமுன்னர்
வைத்தூறு போலக் கெடும். (16)

முகமே மொழியும்

அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்
கடுத்தது காட்டும் முகம். (17)

ஆராய்ந்து செய்தல்

எண்ணித் துணிக கருமம் துணிந்தபின்
எண்ணுவம் என்ப(து) இழுக்கு. (18)

ஊக்கம்

வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர்தம்
உள்ளத் தனைய துயர்வு. (19)

ஒழுக்கம்

ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும். (20)

—திருவள்ளுவர்.

## குறிப்புரை

(1) அகரம்–'அ' என்னும் எழுத்து. ஆதிபகவன் – கடவுள். முதற்று – முதலாகவுடையது.

(2) செயற்கு+அரிய=செய்வதற்கு அருமையான.

(3) ஆற்றும் - செய்யும். நோற்றான் - தவம் செய்தான்.

(4) நன்று - அறம்.

(5) இன்னாத - தீய சொல். கவர்ந்தற்று - தின்றால் போலும்.

(6) யா - எதனை. சோகாப்பர் - வருந்துவர். இழுக்கு - குற்றம்.

(7) ஒறுத்தார் - தண்டித்தவர். பொன்றுந்துணையும் - இறக்கும் வரையும்.

(8) ஏதிலார் – பிறர். காண்கிற்பின் – கண்டறிந்தால்.

(9) பயனுடைய – பயனுள்ள சொல்.

(10) தோன்றின் – மக்களாகப் பிறந்தால்.

(11) வடு – தழும்பு.

(12) புறம் தூய்மை - உடலின் சுத்தம். அகம் – மனம்.

(13) கசடு அற – குற்றம் நீங்க.

(14) செவிச்செல்வம் – கேள்வி.

(15) எல்லாம் - எல்லாப் பொருளும்.

(16) வைத்தூறு – வைக்கோல் போர்.

(17) பளிங்கு – கண்ணாடி.

(18) எண்ணுவம் – ஆராய்வோம்.

(19) அனைய-அவ்வளவு. மலர்-இங்கு மலருள்ள கொடி.

(20) ஓம்பப்படும் - பாதுகாக்கப்படும்.

## வினாக்கள்

(1) உலகம், யாரை முதலாக உடையது ?

(2) பெரியவர் இயல்பு என்ன ?

(3) மகன், தந்தைக்குச் செய்யும் கடமை யாது ?

(4) எதனை மறப்பது, நன்றன்று ?

(5) 'கனி யிருப்பக் காய் கவர்ந்தற்று'—எது ?

(6) நாவைக் காக்க வேண்டியதன் அவசியம் என்ன ?

(7) பொன்றும் துணையும் புகழ், யாருக்கு உண்டு ?

(8) புறங்கூறலை நீக்க உபாயம் எது ?

(9) தீயினால் சுட்ட புண், நாவினால் சுட்ட வடு—இவற்றின் வேறுபாடு என்ன ?

(10) மனத்தூய்மை எதனால் உண்டாகும் ?

(11) கல்வியை எவ்வாறு கற்க வேண்டும் ?

(12) சிறந்த செல்வம் எது ?

(13) எல்லாம் உடையார் யார் ?

(14) வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை, எதுபோல் அழியும் ?

(15) ஒருவன் உள்ளக்கருத்தை நாம் எவ்வாறு அறியலாம் ?

(16) ஒழுக்கத்தைக் காக்க வேண்டியது ஏன் ?

## 2. நன்னெறி

[நன்மை+நெறி=நன்னெறி : நல்ல வழிகளைச் சொல்லும் நூல். இந்நூலைச் செய்தவர், துறைமங்கலம் சிவப்பிரகாசசுவாமிகள். இவர், வீரசைவர். இவர் வாழ்ந்தகாலம், கி. பி. 16-ஆம் நூற்றாண்டாகும்.]

### கோபத்தை அடக்கவேண்டும்

உள்ளம் கவர்ந்தெழுந் தோங்கு சினங்காத்துக்
கொள்ளும் குணமே குணமென்க—வெள்ளம்
தடுத்தல் அரிதோ தடங்கரைதான் பேர்த்து
விடுத்தல் அரிதோ விளம்பு. (1)

### பெரியோர் தன்மை

தங்குறைதீர் வுள்ளார் தளர்ந்து பிறர்க்குறூஉம்
வெங்குறைதீர்க் கிற்பார் விழுமியோர்—திங்கள்
கறையிருளை நீக்கக் கருதா துலகின்
நிறையிருளை நீக்குமேல் நின்று. (2)

### குலத்தின் இயல்பு

எந்தைநல் கூர்ந்தான் இரப்பார்க்கீந்(து) என்றவன்தன்
மைந்தர்தம் ஈகை மறுப்பரோ—பைந்தொடீஇ
நின்று பயனுதவி நில்லா அரம்பையின்கீழ்க்
கன்றும் உதவும் கனி. (3)

### எல்லோரும் இன்சொல்லை விரும்புவர்

இன்சொலால் அன்றி இருநீர் வியனுலகம்
வன்சொலால் என்றும் மகிழாதே—பொன்செய்
அதிர்வளையாய்! பொங்கா(து) அழற்கதிரால் தண்ணென்
கதிர்வரவால் பொங்கும் கடல். (4)

### நல்லவர் நட்பு

நல்லார் செயும் கேண்மை நாடொறும் நன்றாகும்
அல்லார் செயும்கேண்மை ஆகாதே—நல்லாய்கேள்
காய்முற்றின் தின்தீம் கனியாம் இளந்தளிர்நாள்
போய்முற்றின் என்னாகிப் போம். (5)

—துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள்

## குறிப்புரை

1. உள்ளம்–மனம். சினம்–கோபம். தடங்கரை–பெரிய கரை.

2. தீர்வு+உள்ளார் – நீக்க எண்ணமாட்டார். உறூஉம்–அடையும். கறை–களங்கம். திங்கள்–சந்திரன்.

3. எந்தை–எம் தந்தை. நல்கூர்ந்தான்–ஏழையானான். பசுமை+தொடி=பைந்தொடி. பைந்தொடீஇ–பசுமையான வளையல்களை அணிந்த பெண்ணே (மகடூஉ முன்னிலை). அரம்பை–வாழை.

4. இருநீர்–கடல். அழற்கதிர் – சூரியன். தண்என் கதிர்–சந்திரன்.

5. கேண்மை–நட்பு. தீம்கனி–இனிய பழம்.

## வினாக்கள்

1. கோபத்தின் தன்மை என்ன? அதனை அடக்குதல் எதற்கு ஒப்பாகும்?

2. மேலோர், சந்திரனை ஒத்தவர், எப்படி?

3. 'அரம்பையின் கீழ்க் கன்றும், உதவும் கனி'— இதற்கு உபமேயம் எது?

4. உலகத்தார், எந்தச் சொல்லை விரும்பார்?

5. கடல், எப்பொழுது பொங்கும்?

6. கீழோர் நட்பும், மேலோர் நட்பும் எவ்வாறு இருக்கும்?

## 3. நீதிவெண்பா

[நீதி வெண்பா—வெண்பா என்ற ஒரு வகைச் செய்யுளால் ஆன நல்ல முறைகளைச் சொல்லும் நூல். இதன் ஆசிரியர், யார் என்று தெரியவில்லை.]

உலகத்தார் இன்சொற்களையே விரும்புவர்

மென்மதுர வாக்கால் விரும்பும் சகம்கடின
வன்மொழியினால் இகழும் மண்ணுலகம்—நன்மொழிசேர்
ஓதுகுயில் ஏதங்(கு) உதவியது கர்த்தபந்தான்
ஏதபராதம் செய்த(து) இன்று. (1)

தீயவர்கள் பலவழியாலும் துன்பம் செய்வர்

ஈக்கு விடம்தலையில் எய்துமிருந் தேளுக்கு
வாய்த்த விடங்கொடுக்கில் வாழுமே—நோக்கரிய
பைங்கணர வுக்குவிடம் பல்லளவே துர்ச்சனருக்(கு)
அங்கமுழு தும்விடமே யாம். (2)

பெரியோர் தன்மை

சிற்றுணர்வோர் என்றும் சிலுசிலுப்பர் ஆன்றமைந்த
முற்றுணர்வோர் ஒன்றும் மொழியாரே---வெற்றிபெறும்
வெண்கலத்தின் ஓசை மிகுமே விரிபசும்பொன்
ஒண்கலத்தில் உண்டோ ஒலி. (3)

தீயோரிடம் அணுகாதிருத்தல்

கொம்புளதற்(கு) ஐந்து குதிரைக்குப் பத்துமுழம்
வெம்புகரிக்(கு) ஆயிரந்தான் வேண்டுமே—வம்புசெறி
தீங்கினர்தம் கண்ணில் தெரியாத தூரத்து
நீங்குவதே நல்ல நெறி. (4)

மேன்மக்கள் மேன்மக்களே

பொன்னும் கரும்பும் புகழ்பாலும் சந்தனமும்
சின்னம் படவருத்தம் செய்தாலும்—முன்னிருந்த
நற்குணமே தோன்றும் நலிந்தாலும் உத்தமர்பால்
நற்குணமே தோன்றும் நயந்து. (5)

## குறிப்புரை

1. மதுரம்-இனிமை. சகம் - உலகத்து மக்கள். கர்த்தபம் - கழுதை.

2. விடம்—விஷம். பசுமை + கண் = பைங்கண். அரவு-பாம்பு. அங்கம்—உடல்.

3. சிலுசிலுப்பர்—படபடத்துப் பேசுவர். கலம்—பாத்திரம். சிற்றுணர்வோர் × முற்றுணர்வோர்.

4. வெம்பு—கோபிக்கும். கரி—யானை.

5. சின்னம்பட – துண்டு துண்டாக. நலிந்தாலும் - வருத்தினாலும்.

## வினாக்கள்

1. உலகத்தார் கழுதையை ஏன் வெறுக்கின்றனர்?

2. மக்கள், குயிலை ஏன் விரும்புகின்றனர்?

3. பாம்பு, தேள், ஈ இவற்றிற்கு எங்கெங்கு விஷம் அமைந்துள்ளது?

4. ‘துர்ச்சனருக்கு அங்கம் முழுதும் விடம்’—இதன் பொருள் என்ன?

5. ‘பொன்கலத்தில் ஓசையில்லை’ இதற்கு உபமேயம் எது?

6. யானைக்கு எவ்வளவு தூரம் விலகவேண்டும்?

7. தீயோரிடமிருந்து எவ்வளவு தூரம் விலகுவது நல்லது?

8. துண்டுபடப் பொடியாக்கினாலும் நற்குணத்தையே வெளியிடும் பொருள்கள் எவை?

9. பதம்பிரி:—ஏதங்கு; ஏதபராதம்; மண்ணுலகம்; பைங்கண்; ஆன்றமைந்த.

## 4. திருவேங்கடசதகம்

[சதகம் என்பது நூறு செய்யுள் கொண்ட நூலாகும். வேங்கடமலையில் எழுந்தருளியிருக்கும் திருமால் மீது நாராயணசாமி பாரதியார் பாடிய நூறுபாடல் கொண்ட நூல், திருவேங்கடசதகமாகும்.]

விலக்கத்தக்கவை

பெற்றதாய் தந்தைதன் சுற்றமே முதலான
பெரியோரை முனிதல் வேண்டாம்;
பின்னென்று முன்னென்று பேசியே அவமானப்
பேர்கொண்டு திரிதல் வேண்டாம்;

உற்றவர்கள் போலஉட் பகையான வஞ்சகரை
ஒருநாளும் நம்பல் வேண்டாம்;
ஒருவருக்கு இச்சையாய்ப் பொய்சொல்லிப் பின்
ஊமைபோல் நிற்றல் வேண்டாம்; [சபையில்

சற்றுமே பொறுமையில் லாதவர்கள் சண்டையில்
தான்போய் விலக்கல் வேண்டாம்;

தைரியம் தனில்விக்ர மாதித்தன் என்னினும்
தன்னையே புகழல் வேண்டாம் ;
மற்றொன்றும் எண்ணாது செய்யல்வேண் டாம்என்பர்
மணவாள நாராயணன்
மனதிலுறை அலர்மேலு மங்கைமண வாளனே
வரத வேங்கட ராயனே.

—நாராயணசாமி பாரதியார்.

## குறிப்புரை

முனிதல் - கோபித்தல். உட்பகை - மனத்தில் பகை. உறை—தங்கியுள்ள. அலர்மேல் மங்கை – தாமரைப்பூவில் வாழும் திருமகள். வேங்கடராயன் - வேங்கடாசலபதி.

## வினாக்கள்

1. சதகம் என்றால் என்ன ?
2. எவ்வெவற்றைச் செய்யாமல் இருப்பது நலம் ?
3. ஆசிரியர், வேங்கடராயனை எவ்வாறு அழைக்கின்றார் ?

# 5. விவேகசிந்தாமணி

[புத்திக்கு விளக்கம் தருவதாயும், அரிய கருத்துக்களை அறிவிப்பதாயும் உள்ள ஒரு நூல், விவேகசிந்தாமணி. இந்நூலைப் பாடியவர், யாரென்று தெரியவில்லை.]

ஏழைச்சொல் அம்பலம் ஏறாது

வீணர்பூண் டாலும் தங்கம் வெறும்பொய்யாம்
மேற்பூச் சென்பார்
பூணுவார் தராப்பூண் டாலும் பொருந்திய
தங்கம் என்பார்

காணவே பனைக்கீழ் ஆப்பால் குடிக்கினும்
கள்ளே என்பார்
மாணு லகத்தோர் புல்லர் வழங்குரை
மெய்யென் பாரே. (1)

உண்மையின் உயர்வும் பொய்மையின் தாழ்வும்

மெய்யதைச் சொல்வார் ஆகில் விளங்கிடு மேலாம்
நன்மை
வையகம் அவரைக் கொள்ளும் மனிதரில் தேவர்
ஆவார்
பொய்யதைச் சொல்வர் ஆகில் போசனம் அற்பம்
ஆகும்
நொய்யவர் இவர்கள் என்று நோக்கிடார்
அறிவுள்ளாரே. (2)

## குறிப்புரை

1. வீணர் - ஏழை. தரா - பித்தளை. ஆ-பசு. மாண்-சிறந்த. புல்லர் – அற்பர்.

2. வையகம் – பூமி (மக்கள்). போசனம் – உணவு. நொய்யவர் – கீழ்மக்கள்.

## வினுக்கள்

1. உலகத்தார், ஏழைகளை எப்படித் தாழ்வாக மதிக்கிறார்கள் ?

2. உலகத்தார், பணக்காரர்களை எவ்வாறு சிறப்பிக்கிறார்கள் ?

3. மனிதரில் தேவர் ஆவார், யார் ?

4. யாருக்குப் போசனம் அற்பமாகும் ?

---

# III. கதை

## 1. தேசிங்குராசன் கதை

[செஞ்சியில் அரசாண்ட தேசிங்கு, டில்லி சுல்தானின் குதிரையை எவ்வாறு அடக்கினான் என்பது கீழே சொல்லப்பட்டிருக்கிறது. இந்நூலை இயற்றியவர், யார் என்று தெரியவில்லை.]

குதிரையின் அருகே வந்து நின்றான்
குழந்தை தேசிங்கு ;
கொல்லும் வேங்கை போல நின்றது
குதிரையும் அப்போது ;
பார்த்தான் மன்னன் லகானைக் கையால்
பாங்குடனே பற்றிப்
பாய்ந்தே ஏறி முதுகில் அமர்ந்தான்
பாலன் தேசிங்கு ;
கலகல என்றே சிரித்துப் பிடித்தான்
கையில் சாட்டைதனை ;
கனைத்த பரியைக் கழுத்தில் தட்டினான்
கண்மணி தேசிங்கு ;
தட்டின தட்டில் குதிரை கிளம்பித்
தரையில் நில்லாமல்
தாவியே வானில் சென்று பாய்ந்தது
தங்கமேனிக் குதிரை ;
மலையும் குன்றும் உடைந்து சிதறி
மண்ணில் விழுவதைப் பார் !

குன்று மலைகளைத் தாண்டிக் குதிரை
குதித்துப் பாயுது பார்!
அசுவம் போகும் வேகத் தாலே
அலையுது மேகமெல்லாம்!
மேகம் இடித்து மின்னல் கக்கி
மழையைப் பொழியுது பார்!
புரவி போகும் வேகம் அறிந்தான்
புலிக்குட்டி தேசிங்கு;
பொல்லாக் குதிரை தன்னைக் கொல்லப்
போகுதென்(று) அறிந்தான்;
லகானை இழுத்துக் கொடுத்தான் சிமிட்டா
ராசா தேசிங்கு;
சிமிட்டா கொடுத்த வேகத்தினாலே
திகைத்து நின்றது பார்!
நின்ற குதிரையை டில்லிக்குத் திருப்பி
நேரே ஓட்டி வந்தான்;
நிமிடம் தன்னில் கீழே குதித்து
நின்றான் தேசிங்கு.

## குறிப்புரை

வேங்கை - புலி. பரி, அசுவம், புரவி - குதிரை. வான் - ஆகாயம்.

## வினாக்கள்

1. தேசிங்கு, யார்?
2. அவன் எவ்விடத்தை ஆண்டான்?
3. தேசிங்கு, எந்தக் குதிரையை அடக்கினான்?

(4) தேசிங்கு, குதிரையை எப்படி அடக்கினான் ?

(5) குதிரை, தாவிப் பாய்ந்ததால் என்னென்ன எப்படி ஆயின ?

(6) குதிரை, எப்பொழுது திகைத்து நின்றது ?

## 2. காகம் பாம்பைக் கொன்ற கதை

[இந்தக் கதை, பஞ்சதந்திரம் என்னும் நூலில் உள்ளது. இந்நூலைத் தமிழில் செய்யுள் வடிவில் பாடியவர், வீரமார்த்தாண்ட தேவர்.]

### பாம்பு காகமிடும் முட்டைகளைத் தின்னல்

கோடுறு சினையில் காகம்
கூடு வைத்(து) அநேக காலம்
பேடொடு கூடி வாழும்
பெருமரப் பொந்தில் வந்தே
ஆடிய கரும்பாம் பொன்றங்(கு)
அதுபெறும் முட்டை எல்லாம்
நாடியே குடித்துப் போட.
நலிந்துளம் மெலிந்து வாடி. (1)

### நரி காகத்திற்கு உபாயம் சொல்லுதல்

தன்னுயிர்ப் பாங்கனான
சம்புகன் அருகு போய் " இங்(கு)
என்னசெய் குவன்நான் ?" என்ன,
" இதைக் கொலல் அரிதோ ! நீ போய்

மன்னவன் தேவியாடும்
மஞ்சனச் சாலை புக்குப்
பொன்அணி கொண்டு வந்து
போடுக பொந்தில்" என்ன. (2)

பாம்பு கொல்லப் படுதல்

காகம் அப்படியே செய்யக்
காவலன் ஏவ லாளர்
ஏகிமா மரத்தின் பொந்தை
ஈர்ந்தனர் ஈரும் போதில்
நாகம்அங் கிருந்து சீற
நறுக்கினர் இருதுண் டாக
ஆகையால் உபாயத் தாகாத(து)
இல்லையென அறையும் பின்னும். (3)

—வீரமார்த்தாண்டதேவர்.

## குறிப்புரை

(1) கோடுறு—வளைந்த. சினை-கிளை. உளம்—மனம்.

(2) பாங்கன்—தோழன். சம்புகன்—நரி. மஞ்சனச் சாலை—நீராடும் அறை. புக்கு—புகுந்து. அணி—நகை.

(3) ஏவலாளர்—வேலையாட்கள். ஏகி—போய். ஈர்ந்தனர்-வெட்டினர். அறையும்—சொல்லும்.

## வினாக்கள்

(1) 'இங்கு என்ன செய்குவன் நான்' இடம் விளக்குக.

(2) நரி கூறிய உபாயம், என்ன? இக்கதையால் விளங்கும் நீதி, என்ன?

——

# IV. வருணனை

## 1. மழை

[இச் செய்யுள், முக்கூடற் பள்ளு என்ற நூலிலிருந்து எடுக்கப்பட்டுள்ளது. இந்நூலை இயற்றியவர், என்னயினுப்புலவர் ; மதம், வைணவம் ; காலம், 17-ஆம் நூற்றுண்டு.]

மேகமெல்லாம் ஒன்ருய்க்கூடித் தான்கருக்குதே ;—
மின்னல்மின்னி வாசவன்கை வில்லெடுக்குதே ; [மெத்த
நாகரிகப் பொதியமலைக் காற்றடிக்குதே ;—கொண்டல்
நாலுதிக்கும் கோடையிடி தானிடிக்குதே ;
ஏகபோக மாமரத்தில் குயில்கள் கூவுதே ;—மழைக்(கு)
ஏற்றமாம் சொறித்தவளை கூப்பிடுகுதே ;
ஆகையினுல் எங்கள்திருக் கூடல்நகரில்
அந்திநேர மெல்லாமழை வந்துபெய்யுமே.

—என்னயினுப்புலவர்.

### குறிப்புரை

வாசவன்-இந்திரன். கொண்டல்-மேகம். ஏகபோகம்-முழுஇன்பத்துடன். கூடல்-திருமுக்கூடல் என்னும் ஊர். அந்தி-மாலை.

### வினுக்கள்

(1) மழை வருவதற்கு அறிகுறிகள், எவை ?

(2) குயில்கள், விரும்பி வசிக்குமிடம் எது ?

## 2. ஆறு

[இச்செய்யுள் பகுதி, 'மலரும் மாலையும்' என்னும் நூலில் உள்ளது. இதனை இயற்றியவர், கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை. அவர், திருவிதாங்கூர் சமஸ்தானத்தில் தேரூரில் பிறந்தவர். இவர், இப்பொழுது வாழ்ந்து வரும் புலவர்.]

கல்லும் மலையும் குதித்து வந்தேன்—பெருங்
காடும் செடியும் கடந்து வந்தேன் ;
எல்லை விரிந்த சமவெளி எங்கும்நான்
இறங்கித் தவழ்ந்து தவழ்ந்து வந்தேன். (1)

ஆயிரம் காலால் நடந்து வந்தேன்—நன்செய்
அத்தனையும் சுற்றிப் பார்த்து வந்தேன் ;
நேயமுறப் புன்செய்க் காட்டிலும் அங்கங்கு
நீரை இறைத்து நெடுக வந்தேன். (2)

அல்லும் பகலும் அலைந்து வந்தேன்—எங்கள்
ஆழி இறைவனைக் காண வந்தேன் ;
நில்லும் எனக்கினி நேரமில்லை—இன்னும்
நீண்ட வழிபோக வேண்டு மம்மா. (3)

—தேசிகவிநாயகம்பிள்ளை.

### குறிப்புரை

கால்–வாய்க்கால். நேயம்–ஆசை. அல்–இரவு. ஆழி–கடல். இறைவன்–தலைவன்.

### வினாக்கள்

(1) ஆறு, எங்கு உண்டாகிறது ?
(2) ஆறு, எப்படிப் பாய்கிறது ?
(3) ஆறு, கடைசியாக எங்குச் சென்று அடையும் ?
(4) ஆறு, தன் கதையைச் சொல்வது போல் எழுதுக.

# V. பல்சுவை

## 1. தமிழ்நாட்டின் சிறப்பு

[கீழ்க்கண்ட செய்யுள், ஔவையார் பாடியது. இவர், கடைச் சங்க காலத்தில் வாழ்ந்தவர்; உலகத்தாரால் நன்கு மதிக்கப்பட்டுள்ள சிறந்த பாவலர்.]

வேழம் உடைத்து மலைநாடு ; மேதக்க
சோழ வளநாடு சோறுடைத்து ;—பூழியர்கோன்
தென்னாடு முத்துடைத்து ; தெண்ணீர் வயல்தொண்டை
நன்னாடு சான்றோர் உடைத்து. (1)

—ஔவையார்.

### குறிப்புரை

வேழம்-யானை. மேதக்க-பெருமையுள்ள. பூழியர் கோன்-பாண்டியன். தெண்ணீர்—தெளிந்தநீர்.

### வினாக்கள்

(1) சேர நாடு, சோழ நாடு, பாண்டிய நாடு, தொண்டை நாடு இவை ஒவ்வொன்றின் சிறப்பு, என்ன ?

(2) இந்த நான்கு நாட்டிற்கும் தலைநகரங்கள், எவை ?

## 2. கற்றவர் சிறப்பு

[இந்தச் செய்யுள், கம்பர் பாடியது. அவர், சோழ நாட்டில் பிறந்தவர் ; கி. பி. 12-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர்.]

காதம் இருபத்து நான்கொழியக் காசினியை
ஓதக் கடல்கொண்(டு) ஒளித்ததோ—மேதினியில்

கொல்விமலைத் தேன்சொரியும் கொற்றவா நீமுனிந்தால்
இல்லையோ எங்கட்(கு) இடம். (2)

—கம்பர்.

### குறிப்புரை

காதம்—பத்துமைல். காசினி-பூமி. ஓதம்—குளிர்ச்சி. மேதினி—பூமி. கொற்றவா—அரசனே. முனிந்தால்-கோபித்தால்.

### வினாக்கள்

(1) சோழ நாட்டின் பரப்பு, எவ்வளவு ?
(2) கம்பர், இப்பாடலில் உரைத்ததென்ன ?

## 3. விகடராமன் குதிரை

[காளமேகப் புலவர், பாடிய செய்யுள் இது. இவர், சோழநாட்டில் பிறந்தவர் ; வசைக்கவி பாடுவதில் வல்லவர் ; சுமார் 300 ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்தவர்.]

முன்னே கடிவாளம் மூன்றுபேர் தொட்டிழுக்கப்
பின்னே இருந்திரண்டு பேர்தள்ள—எந்நேரம்
வேதம்போம் வாயான் விகடராமன் குதிரை
மாதம்போம் காத வழி. (3)

—காளமேகப்புலவர்.

### குறிப்புரை

வேதம் போம்வாயான்—வேதத்தை ஓதும் வாயையுடையவன். போம்-போகும். இருந்து + இரண்டு = இருந்திரண்டு.

### வினாக்கள்

(1) இப்பாடல், தெரிவிக்கும் கருத்தென்ன ?

(2) விகடராமன், எந்த இனத்தில் பிறந்தவன்? எப்படி அறிவீர் ?

## 4. கண்ணுக்கினியான்

[அந்தகக்கவி வீரராகவமுதலியார், பாடிய செய்யுள் இது. இவர், பிறவிக் குருடர் ; 300 ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்தவர்.]

தேன்பொழிந்த வாயான் திருவேங்க டத்துடனே
ஏன்பிறந்தான் கண்ணுக் கினியானே—வான்சிறந்த
சீதேவி யாருடனே செய்யதிருப் பாற்கடலில்
மூதேவி யேன்பிறந்தாள் முன். (4)

—அந்தகக்கவி வீரராகவமுதலியார்.

### குறிப்புரை

தேன்பொழிந்த வாயான்-தேன்போன்ற இனிய சொற்களைப் பேசும் வாயையுடையவன். கண்ணுக்கினியான், அண்ணன் ; திருவேங்கடம், அவனுக்குத் தம்பி. சீதேவி-இலக்குமி. மூதேவி-இலக்குமிக்கு மூத்தவள். திரு+பால்+கடல்=திருப்பாற்கடல்.

### வினாக்கள்

(1) வீரராகவ முதலியார், யாரை இகழ்ந்து பாடியிருக்கிறார் ?

(2) சீதேவிக்கும் மூதேவிக்கும் ஒப்பாவார் யார் யார் ?

## 5. கைத்தொழில்

[இச்செய்யுளைப் பாடியவர், நாமக்கல் இராமலிங்கம் பிள்ளை. இவர், இக்காலத்தில் வாழ்பவர்; சென்னை அரசாங்கக் கவிஞர்.]

கைத்தொழில் காத்திடும் ஒருநாடே
　　கலகம் குறைந்துள்ள திருநாடாம்;
எத்தனைக் கெத்தனை எந்திரமோ
　　அத்தனைக் கத்தனை தொந்தரவே. (1)

ஏழை செல்வன் என்றுவரும்
　　எல்லாப் பிணக்கும் நின்றுவிடும்;
வாழிய வாழிய கைத்தொழில்கள்
　　வாழிய வாழிய சத்தியமும்! (2)

—நாமக்கல் இராமலிங்கம்பிள்ளை.

### குறிப்புரை

தொந்தரவு - வருத்தம். பிணக்கு-கலகம். சத்தியம்-உண்மை.

### வினாக்கள்

(1) கைத்தொழிலைக் காப்பதால் நாட்டிற்கு வரும் நன்மைகள், எவை?

(2) கலகம் எந்தக் காரணத்தால் குறைவடையும்?

———



---

# முத்தமிழ் வாசகம்

[முதல் படிவம்]

(பொது)

ஆசிரியர்கள் :

வித்துவான், கோ. அரங்கசாமி ஐயங்கார்.

வித்துவான், S. கிருஷ்ணசாமி, B.A., B.O.L.

விலை 0—14—0